(சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு).

இதுவரைக்கும் தமிழில் வாராதவை

---

## சித்தாந்த பிந்து.

இது சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த தசசுலோகியின் வியாக்கியானம். இவ்வியாக்கியானம் செய்தவர் ஆரியபாஷையில் மகாகியாதிபெற்ற மதுசூதன சரஸ்வதி சுவாமிகள். இப்புஸ்தகம் ஆத்மா இன்னது அநாத்மா இன்னது என்பது பற்றிச் சுருதியாதிப் பிரமாணங்களுடன் யுக்தி சகிதமாக நன்கு விளக்கிக் கூறுகின்றமையின் வேதாந்த சாஸ்திரத்திற்கு ஒரு திறவுகோல் போலவுளதாம்.

காலிகோ விலை அணா 10 ராப்பர் விலை அணா 8.

## வேதாந்த பரிபாஷை.

இது வேதாந்த வித்வத் சிரோமணி யென்று மிகப்பிரசித்தி பெற்றுள்ள தர்மராஜ தீட்சிதரால் இயற்றப்பட்டது. இஃதெட்டுப் பரிச்சேதமுடையது. இதனால் வேதாந்தத்திற்குரிய பிரமாணங்களிவ்வளவென்பதும் அவற்றின் பயனும் வேறு அநுபவ ரகசியங்களும் தெளிவாயறிந்துகொள்ளலாம்.

காலிகோ விலை அணா 12 ராப்பர் விலை அணா 10.

## சர்வதரிசன சங்கிரகம்.

இதிற் சார்வாக மதமுதல் சாங்கரமதமீறாக 16 மதசித்தாந்தங்களடங்கியிருக்கின்றன. விலை ரூபாய் 2.

| | | | |
|---|---|---|---|
| தோடகம் ... ... ... | 0 | 4 | 0 |
| சிவமகிம்நஸ்தோத்திரம் ... ... ... | 0 | 1 | 0 |
| ஆத்மவித்யாவிலாசம் ... ... ... | 0 | 2 | 0 |

பரப்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ சேஷாத்திரி சிவனார்

அருளிச்செய்த

# நாநாஜீவவாதக்கட்டளை.

---

இது

சென்னை, ஹிந்து தியாலஜிகல் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்

கோ. வடிவேலுசெட்டியாரவர்கள்

இயற்றிய

## குறிப்புரையுடன்

ஷை யாராலும்

மங்கலம் - சண்முகமுதலியாரவர்களாலும்

சென்னை,
கோமளேசுவரன்பேட்டை,
சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.



1909.

[விலை அணா 4.]

ஓம்

பரப்பிரஹ்மணே நம:.

# Introduction.

That the Tamil literature has drawn much of its inspiration from the Mother of all Languages, especially from her Philosophies, can be very easily made out if we just glance over the works of such great Tamil writers, as Thiruvalluvanayanar, Thathuvarayar, Manickavasagar, Thayumanavar, Thirugnanasumbandhar, Appar, Sundarar, Veeray Alavanthar, Nammalvar, Thandavarayar, Thuray-mangalam Sivappragasar, Thirumular, Avvayar and a host of other eminent writers. The great author of "NANA JEEVA VATHAK KATTALY" is one of them. The book has been very ably commented upon by MR. K. VADIVALU CHETTYAR, Pandit, Hindu Theological High School, Madras. Whoever wants to have an insight into the mysteries of creation as understood by the old Aryan sages, and have some conception of the Vedanta Philosophy, sh

make it a point to go through this invaluable work. In a very short compass, the difficult subject has been handled in such a masterly manner, that it throws a great credit to the ability of the intelligent author. Those whose ignorance of language, does not allow them to read the Vedanta Philosophy in the orignal, will do well to read this little but perfect book which has been so lucidly commented upon by Mr. Chettiar. The reader will be more than paid for his labours This is my honest opinion

**Swami Ramakrishnanandha**

*Of Sri Ramakrishna Mission.*

MADRAS.

# முகவுரை.



ஸ்ரீ அகில ஜகந்நாயகனாகிய பரமேசுவரன் அநாதி சம்சார பதிதர்களாயிருக்கின்ற ஜீவர்கள் உஜ்ஜீவிக்கும் பொருட்டு மூன்று காண்ட வடிவினதாய வேதத்தை வெளிப்படுத்தினார். அம்மூன்று காண்டங்களில் முறையே மலம் விக்ஷேபம் ஆவரணமென்னும் மூன்று தோஷங்களையும் நிவிர்த்திக்கும் உபாயம் பலவாக அவ் வேதாதிகாரமுடைய நூல்களில் அறிவு பெறாது அவ்வுபாயங்களைத் தெரிந்துகொள்ள மாட்டாத ஜீவர்களிடத்துக் கருணையினால் அவ்விறைவனருள்வழிப்பட்ட ஆன்றோர்கள் அவ்வேதப் பொருள்களை விரித்தும் சுருக்கியும் பல நூல்கள் செய்திருக்கின்றனர். அவற்றுள் பேதத்தை ஒழித்து நிரதிசய சுகத்தைத் தரும் சாமானியமாயுள்ளது சர்வமத சித்தாந்த சிரோமணியாகிய வேதாந்த சித்தாந்தமாம். இதனை விளக்குதற்கு ஆரியத்திலும் தமிழிலும் அநேக நூல்களமைந்திருக்கின்றன. அங்ஙனமாயினும், நான்கு சாதனங்களையுற்றவரும் பரமாஸ்திகரும் அப் பல நூல்களை ஆராயும் நுண்ணறிவின்றிய மந்தமதியினருமான அதிகாரிகள் எளிதிலறிந்துய்யுமாறு கருணையே வடிவங்கொண்ட ஸ்ரீசேஷாத்திரி சிவனார் நாநாஜீவவாதக்கட்டளை என்னும் நூலினைச் செய்தருளினர். அது பல வருடங்கள் தொட்டு நம்முன்னோர்களால் வேதாந்தம் பயிலும் பாலர்க்கு முதனூலாக வழங்கப்பட்டு வருவது

பிரசித்தம். ஆனால், இக்காலத்தில் ஆரிய முதலிய பல மொழிகளினின்றும் தமிழிற் பல கடினமான விஷயங்கள் வந்து வழங்கிவருகின்றன. அவற்றையும் தெரிந்து கொள்ளுமாறு ஆசிரியர் இந்நூலிலேயே சூசிப்பித்தாரேனும் அந்தச் சூசனையாகிய குறிப்புக்களை ஆங்காங்கு விளங்க எடுத்துரைத்தாலன்றி யாவரும் எளிதிலுணர்தல் அரிதெனவுணர்ந்து, சென்னை-இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும், சென்னைமாநகரத்திலே கண் வேதாந்த பாஸ்கரராயெழுந்தருளியிருந்த மகான். சை. இரத்தின செட்டியார் அவர்களிடத்து வேதாந்த அப்பியாசஞ் செய்தவர்களுள் ஒருவருமாகிய ம-௱-௱ ஸ்ரீ. கோ-வடிவேலு செட்டியார் அவர்கள் இதற்குக் குறிப்புரையொன்று எழுதினர். அது வேதாந்த விஷயங்களைத் தெளிவாய்க் காட்டுதலோடு அதனைப் படிப்பவர்களின் புத்தி, விசாரசாகரம் விருத்திப்பிரபாகர முதலிய பெருநூல்களில் பிரவேசித்தற்குப் பேருதவியாகவுமிருக்கின்றது. ஆதலால் வேதாந்தப் பிரதமாப்பியாசிகள் ஒவ்வொருவருக்கும் இஃதின்றியமையாததே.

☞ வே. கு.

---

இம்முகவுரை வேதாந்த வித்வச்சிரோமணியும் விருத்திப்பிரபாகரம், விருத்திரத்நாவலி, விசாரசந்திரோதயம், பாலபோதம், தர்க்ககௌமுதி முதலிய அரிய பெரிய நூல்களின் மொழிபெயர்ப்பாசிரியருமாகிய தஞ்சைமாநகரம், ஸ்ரீமத்-வே. துப்புசாமிராஜு அவர்களால் எழுதப்பட்டது.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.



சிதம்பரவாசி-கோவிலூர்

ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள்

அருளிச்செய்த

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தலைமுறைபடா நாசிவ வாத மென்று
தவிறருகட் டளைநூற்கு ஞான நூல்கள்
பலவுமாய்ந் தங்கங்கே பகர வேண்டும்
பாங்குடைய பொருளெடுத்து வியாக்கியா னித்த
பிலைதுசென்னைப் பதிவைகும் வடிவே ளுமை
விருந்தவத்தோ னிதிலனுவு முரணின் றுமாற
தலைமுதா தனமென்னு நான்கி னோடுங்
கூடியாய் பவர்க்குமுத்தி கூடு மன்றே.

சுபம்.

மகாவித்வான்-ஸ்ரீமத்.
காஞ்சீபுரம்
இராமஸ்வாமி நாயுடவர்கள் இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய சந்தவிருத்தம்.

மேனு ளறிஞர் மேதினியோருய விழைவொ டுரைத்தருள்செய்
நானு சிவ வாதக் கட்டளை யெனுமொரு நவையறுநூற்
கானு வன்பினுனர் விரிவுரை தந்தன னணிவரு மிப்பர்குலக்
கோனு வலர்பெரு மானெழில் வடிவேற் குலவுறு பெயரோனே.

---

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகளாதீனம்
ஈசூர். சச்சிதாநந்த சுவாமிகள் மாணுக்கர்களுள்
ஒருவராகிய ஸ்ரீமத். தண்டறை
சுப்பராய ஆசாரியாரவர்கள் இயற்றிய
எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பரத்தின துண்மை தெளிந்தவர் போற்றும்
பாக்கிய ஞானமார் செம்மல்
இரத்தின வள்ள லின்னரு டன்னு
லிலங்குமத் துவிதமெய் யறிந்தோன்
வரத்தனி நாநா சிவவா தக்கட்
டளைக்கொரு குறிப்புரை வகுத்துட்
டிரத்தினை யெவர்க்குந் தெரித்தனன் வடிவே
லெனும்பெயர்ச் செவ்வியோன் மாதோ.

---

ஷை சுவாமிகள் மாணுக்கர்களுள் ஒருவராகிய
ஸ்ரீமத். ப-தங்கவேலையரவர்கள் இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒட்டொறுவொன் றில்லாத வான்மாவே யுண்மையென
வுரைக்குஞ் சீரார்

கட்டளைக்கோர் குறிப்புரையைக் கருணையினு லெடுத்தெவர்க்
காட்டி னுனல் [கும்
சிட்டர்களாற் புகழ்கின்ற திறமுடையா னறிவுடையான்
சீர்த்தி மிக்கான்
இட்டனவன் வடிவேலென் றியற்பெயரா னெம்மனோர்க்
கெளிதி னம்மா.

---

ஷை-சுவாமிகள் மாணுக்கர்களுள் ஒருவ..ாகிய

## ஸ்ரீமத். பி-ஆறுமுக முதலியாரவர்கள்

## இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நூர் துருவி னுண்மைநிலை நயந்தெவரு மறிந்திடவோர்
நாநா சீவ
வாதமெனுங் கட்டளையி னரியபொருள் வளமினிதின்
வகுத்திட் டானல்
வேதமுடி விளங்கிநெல் லிரத்தினத்தைப் பதித்தவடி
வேலென் றிங்ங
னோதுநம தாப்தசிகா மணியெவரும் புகழவுள
முன்னி மாதோ.

## வித்வான்-ஸ்ரீமத்.

## ம. இராஜகோபாலப்பிள்ளையவர்கள்

## இயற்றிய

### நேரிசைவெண்பா.

தருநாநா சீவவா தக்கட் டளைக்கிங்
கருஞான முற்றெவரு மார—விரிவா
யிலகுரைதந் தான்புலவ ரேறுவடி வேலென்
றுலகுரைசீ ருற்று னுவந்து.

ஓம்

பரப்பிரஹ்மணேநம:.

## சொரூப வணக்கம்.

"பொன்னுல கத்தினிற் புவியி லந்தரத்
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
மன்னுசிற் சோதியே வடிவ மியாவுமாய்த்
தன்னுவ தப்பொரு டொழுதி றைஞ்சுவாம்."

## குரு வணக்கம்.

"தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு
மந்தமிலா வின்பநமக் காவானு—மெந்தமுயிர்
தானுகு வானுஞ் சரணுகு வானுமருட்
கோனுகு வானுங் குரு."

ஓம்

பரப்பிரஹ்மணேநமஃ.

# * நாநாஜீவவாதக்கட்டளை.



## நூல் அவதாரிகை.

நிஷ்காம கருமத்தினால் மல (பாவ) மும் ஈசுவரோபாசனையினால் விட்சேபமு (மன மொருமுகப் படாமையு)ந் நிவிர்த்தியாகிச்சொரூபாவரண(பிரஹ்மவடிவ ஆன்மாவை யுள்ளவா றறியாமை) மாத்திர முடைத்தாய், நித்தியா நித்திய வஸ்து விவேகம் (நித்தியப்பொரு ளின்னது அநித்தியப் பொரு ளின்னது என்று பகுத்தறியுந் தன்மை), இகபரபோக விராகம் (இவ்வுலகத்திலும் சுவர்க்காதி லோகத்திலும் உள்ள போகத்தில் விருப்பமில்லாமை),சமாதிசட்க சம்பத்தி,(சமை, தமை, திதிக்கை, உபரதி, சிரத்தை, சமாதி யென்னு மாறு குணங்கள்), முமுட்சுத்துவம் (இயல்பாகவே மோட்சத்தில் விருப்பமா யிருத்தல்) என்னு நான்கு சாதனமு முடைய அதிகாரி சற்குருவாயிலாகப் பிரஹ்மான்ம ஐக்கிய ஞானத்தை யெளிதிலுணர்ந்து, காரண (மாயா) சகித ஜகத்தின் நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியுமாகிய மோட்ச மடையுமாறு உபநிஷத்து,கீதை,பிரஹ்மசூத்திர மென்னும் பிரஸ்தானத் திரயங்

---

* நாநா - பல, ஜீவர் - உயிர்கள், வாதம் - பொய்யென்று நிச்சயித்தல், கட்டளை - முறை; எனவே, சீவபேதங்களைத் தத்துவ ஞானத்தினால் வாதித்து (பொய்யென்று நிச்சயித்து) ஏகவடிவாய் விளங்கும் ஆன்மவடிவ சிவத்தைத் தெரிவிக்கும் நூல் என்பது அதன் திரண்ட பொருளாம்.

களது முடிவை நல்லாசிரியர் மூலமா யுணர்ந்து அநாதமாகார விருத்தி யொழிந்து அறிவாகாரமாய விளங்கியிருந்த சேஷாத்திரி சிவனூர் என்னும் பெரியார் சகல வனர்த்தங்களையும் காரணத்தோடு ஒழித்தற்கு நேர் சாதனமாயுள்ள மகா வாக்கியத்தினபொருளை யிந்நூலின்கண் அத்தியாரோப அபவாதக்கிரமமாகக் கூறுகின்ருர.

## விஷய அவதாரிகை.

ஆன்மவடிவசிவம் உபாதியினுலே ஜவகையாக விளங்கலை க்கூறல்.

1 —சுத்தப பிரஹ்மமாயிருக்கின்ற சர்வசாட்சியினிடத்திலே அக்கினியிற சூடுபோல அபின்னமாக வொரு சத்தியுண்டு அந்தச சத்தி அதீதபபிரஹ்மத்திலடங்கியிருக்கும்போது (அதறகுச) சுததப் பிரஹமமென்று பெயா. இநதச சததி விசிரிம்பித்துச சுத்தப பிரஹமத்தை வியாபிக்குமபோது (அது) பரை வியாபகததுக்குள் இருந்தபடியினுலே (அதற்குப) பரபபிரஹமமென்று பெயராயிற்று.

### சுத்தப் பிரஹ்மம்

1 —(குறிப்புரை.) ஒன்ருயும், அகண்டமா (கண்டிககப படாததா) யும், அசஙகமா (கூட்டமற்றதா) யும், உற்பத்தி நாச மில்லாததாயும், அதிருசியமா (ஆத்மானுபவத்தா லன்றி இந்திரி யாதிகளுக்கு விஷயமாகாததா) யும, நாம (பெயர்) ரூப (வடிவ) ஙகளற்றதாயு மிருப்பது பிரஹ்மமாம். இது பெருமையால் (வியாபகமா யிருத்தலால) தன்னை யொன்றும விபாபித்திருத்த வில்லாதிருப்பது பற்றிச 'சுத்தப்பிரஹ்மம' என்று சொல்லப்படுகிறது தததுவக் கூட்டங்களைத் தத்தங் காரணங்களி லொடுக்கிக்கொண்டு சென்ருல் காரணகாரியங்களின்றி முடிவாய் நிற்பது பிரஹ்மமேயாதலா லிவ்வவசரத் திது சுத்

தப் பிரஹ்ம மென்றும், அநிர்வசனீய வடிவ மாயாசத்தியோடு கூடி உலகமாகிய காரியத்திற்கு அபின்ன நிமித்த உபாதான (முதல்) விவர்த்தகாரணமாய் நின்ற அவசரத்துக் காரணப் பிரஹ்மமென்றும்,மாயையின்சத்துவகுணத்தில் பிரதிபலித்து உருத்திரனுதி வடிவமாய் நின்ற அவசரத்துக் காரியப்பிரஹ்ம மென்றும்சொல்லப்படும் சுத்தப் பிரஹ்மத்தை வஸ்து என்றும், தத்துவம் என்றும், மெய்ப்பொருள் என்றும், செம்பொருள் என்றும், உள்ளது என்றும் கூறுவர்.

## சர்வசாட்சி.

பிரஹ்மமானது மறைவின்றி (நேரே) சொரூபவடிவ ஞானத்தினுலே தனது அநாதி (உற்பத்தியில்லாத) கற்பித மாயையிற் றோன்றிய சகல திரிபுடி (காண்பான, காட்சி, காணப்படும்பொருள்) களையும் விளங்கச்செய்து சம்பந்தமின் றிக் காண்பதால் சர்வசாட்சியாம்.

## சத்தி.

சுதந்தரமின்றி (தர்மமா) யிருப்பது சத்தியெனப்படும். சண்டுசசத்தியென்றது பிரகிருதியை "பிரஹ்மசந்நிதி மாத்தி ரத்தினுலே பல சித்திரமான நகந்நிர்மாண ஸாமர்த்திய முடைய புத்திசுவரூபமாகிய பிரஹ்மத்தினுடையசத்தியே பிர கிருதி" என்று நிராலம்போபநிஷத்துக் கூறுகின்றது. (பிர கிருதி யென்னும்) சத்தியானது (பிரஹ்மமென்னும்)சத்தனைத தவிர வின்றெனபதை விளக்க 'அக்கினியிற் சூடுபோல அபின்னமாக (வேறுபடாததாக) ஒரு சத்தியுண்டு' என்று உவமான வாயிலாகக் காட்டப்பட்டது. (அக்கினியிற் சூடு போல என்பது உவமானம்).

## அதீதப்பிரஹ்மம்.

மனோவாக்குக்களா லறியப்படாது காரணகாரிய ரகிதமா யுள்ள சேதனம் அதீதப்பிரஹ்மமாம் [அதீதம்-மீறிப்போதல்]. அதீதப் பிரஹ்மத்தில் பிரகிருதியாகிய சத்தி யடங்கி யிருத்தல் கயிற்றில் பாம்பாதற்குரிய சத்தி யடங்கியிருத்தல் போலவாம்.

பரை.

பிரகிருதியாகிய சத்தி விசிரிம்பித்து (அதிக்கிரமித்து அம்சாவது வெளிப்பட்டு) சுத்தப் பிரம்மத்தை வியாபிக்கும் போது பரை யெனறு சொல்லப்படுகிறது. பரை யெனினும் பராசத்தி யெனினும் ஒக்கும். திருக்கோவையார் 'காகத்திரு கண்ணில்'' எனனுஞ் செய்யுள் ளுரையில் "யவையுமாமேக ம பராசத்தி'' என்றனர் பேராசிரியர் இதுதான் நாமரூபவடிவ எப்பொருட்கும் மூலகாரணமாய் நிற்பது இது மூலாவித்தை யென்றும் மகாமாயை யெனறும் சொல்லப்படும்.

சுத்தப் பிரஹ்மத்தில் கற்பனையாக அடங்கியிருந்த பிரகிருதி உலககாரண மாமாறு வெளிப்பட்ட அவசரத்து அதற்குப் பிரஹ்மம காரணமாமென்றும், அதனால் கற்பிதமாக மறைபட்டபிரஹ்மத்தின் ஏகதேசபாகம் பரபப்ரஹ்மமென்றும்பேர் பெறுதலின் அப்பேர் அதன் காரியமென்றும் இங் கறியத்தககனவாம்

பரப்பிரஹ்மம்.

நாமரூபவடிவ எப்பொருட்கும் விவர்த்த காரணமாயும தனக்கொரு காரணமின்றி மேற்பட்டும் வியாபகமாயு மிருப்பது பரப்பிரஹ்மமாம்.

2.—இலட்சணை சூனியமா யிருக்கின்ற விந்தச் சத்திக்குப் பிரஹ்மத்தினுடைய சந்நிதானத்திற் புருஷ சமுகத்திமேல் ஸ்திரீக்கு இன்பஞ் சனித்தாற்போல அவிகிருத சத்வ ரஜஸ் தமோகுணங்க ளுண்டாயின. இந்தச சுத்த சத்துவத்திற்கு ஆனந்தரூப சத்தியென்று பெயர்; சுத்தரஜசுக்குச சித்துரூப சத்தியென்று பெயர்; சுத்த தமஸுக்குச் சத்துரூப சத்தியென்று பெயர். இந்தக்காரணமான ஆனந்தரூப சத்தியுடனே பரப்பிரஹ்மங்கூடிச் சர்வானந்த சுழுத்தியை யடைகின்ற போது (அதற்குப்) பரப்பிரஹ்மமென்

கிற பெயர் போய்ப் பரமானந்த ரென்கிற பெயர் வந்தது. இந்தப் பரமானந்தர் சித்துரூப சத்தியுடனே கூடிச் சாவப்பிரகாச மென்கிற சொரூபவத்தையை யடைகின்றபோது, (அவருக்குப்) பரமானந்த ரென்கிற பெயர்போய்ப் பரிபூரண ரென்கிற பெயர் வந்தது. இந்தப் பரிபூரணர் சத்துரூப சத்தியுடனே கூடிச் சாவ வியாபக மென்கின்ற சாக்கிராவத்தையை யடைகிறபோது (அவருக்குப்) பரிபூரண ரென்கிற பெயர்போய்ப் பரனென்கிற பெயர் வந்தது.

இலட்சணம்.

2.—(சூ-ரை.) ஒன்றிற் சிறப்பா யிருப்பதாகிய குறி இலட்சண மெனப்படும் இது சொரூப லட்சண மெனவும், தடத்தலட்சண மெனவும் உபலட்சண மெனவும் மூவகையாம

(1) எது (ஒன்றிற் சிறப்பாயிருப்பதாகிய குறி) எப்போது மிருப்பதாய (மற்றவற்றினின்றும்) வேறுபிரித் தறிவிக்கின்றதோ அது சொரூபலட்சணமாம் இதற்குதாரணம் - சூடுடையது தீ யென்றாற்போல்வது. (2) எது ஒருகாலத்திருப்பதாய (மற்றவற்றினின்றும்) வேறுபிரித் தறிவிக்கின்றதோ அது தடத்தலட்சணமாம். இதற் குதாரணம் - நாமக்காரன் இவன் என்றாற்போல்வது (3) எது காரியத்திற் சம்பந்த மில்லாததாய் (மற்றவற்றினின்றும்) வேறுபிரித் தறிவிக்கின்றதோ அது உபலட்சணமாம் இதற் குதாரணம்-காகமுடைய வீட்டிற்குப்போ என்றாற்போல்வது; சாகம் போனவிடத்தும வீடறியப்படுவதே இதில் விசேடணமாம் உபலட்சணம தடத்தலட்சணத்தி லடங்குமாயினும் விளங்குதற்பொருட்டு வேறுபிரித் தெழுதப்பட்டது.

இலட்சண சூனியம்

பரையென்னும் சத்தி (பிரகிருதி) சத்தென்றாவது அசத்தென்றாவது குறிப்பிட்டறியக்கூடிய இலட்சணமில்லா திருப்பதுபற்றி 'இலட்சண சூனியமா யிருக்கின்ற இந்தச்சத்திக்கு' என்று கூறப்பட்டது.

மமே ஏகத்தாக இருந்தது; (நாமரூபமற்ற இந்தப் பிரபஞ்சமானது பிரஹ்மத்தைவிட அந்நியமாக விருக்கவில்லை); ஒன்றுகவே இருந்தது; சம்பூரணமாக இருந்தது; கிழக்கே பூரணமாயும், தெற்கே பூரணமாயும், மேற்கே பூரணமாயும், வடக்கே பூரணமாயும், மேலும் பூரணமாயும், கீழும் பூரணமாயும், எங்கும் பூரணமாயு மிருந்தது கிழக்கு முதலான திக்குகளொன்றது மில்லை குறுக்குமில்லை, கீழுமில்லை, மேலுமில்லை" என்று கூறுவதினுங் கவனிக்கத்தக்கது.

சத்துருபசத்தி — நாம ரூபவடிவப் பொருள்கள் சத்தியமென்று சடசித்விசார நோக்கில்லாதவர்கள் விவகரித்தற்குக் காரணமா யிருக்குஞ் சத்தி

சாக்கிராவஸ்தையில் சர்வ (எல்லாத்) தத்துவங்களும் வியாபகமாய விவகரித்தற் கிடமாயிருத்தல் பற்றிச 'சர்வவியாபசமென நின்ற சாக்கிராவத்தை' என்று கூறப்பட்டது

பரன் — ஜாக்கிராவஸ்தையில் விவகரிக்கும் தத்துவங்களுள் மேலாய விளங்குபவன்.

[ஈண்டுக் கூறிவந்த நால்வகைச் சத்திகளுள் பிரஹ்மசத்திக்குப் பராசத்தி மகாகாரண சரீரமெனறும், ஆநந்தரூபசத்தி காரணசரீரமென்றும், சித்துருபசத்தி சூட்சுமசரீரமென்றும், சத்துரூபசத்தி ஸ்தூலசரீரமெனறும் அறிக. இதனால் பிரஹ்மத்திற்கு யதார்த்தநிலையில் யாதொருசரீரமு மின்றெனறும் அயதார்த்த நிலையில நால்வகைச சரீரம் (கற்பிதமாக) உண்டெனறும் பெறப்படுமென்க. பரை காரணமாகப் பிரஹ்மம்: சுத்தப் பிரஹ்மம், பரப்பிரஹ்மம், பரமாநந்தர், பரிபூரணர், பரன் என்று பெயர் பெற்றவாறு காண்க].

அ - கை.

## பிரகிருதித் தோற்றமும், ஈசுவரத் தோற்றமும் கூறல்.

3.—இந்த அகண்டபரிபூரண சச்சிதானந்தப் பிரஹ்மத்தினிடத்திலேசுத்தியிலிரசிதம்(கிளிஞ்சலில்வெள்ளி)

மீதான்றிறைற்போல மூலப் பிரகிருதி யென்றொரு சத்தி புண்டாயிற்று. அந்த மூலப்பிரகிருதியும் விசிஷ்டதகுணமாகிய முக்குணத்துடனே கூடியிருக்கும். அந்தப் பிரகிருதியின் சத்துவகுணம் மாயை யென்றும், சர்வஞ்ஞவியாபியென்றும், ஈசுவரகாரணசரீரமென்றும் சொல்லப்படும். இந்த மாயையினிடத்திலே நிர்மலசலப பிரதிபிம்பம்போலப் பிரஹ்மம் சலட்சணமாகப் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்யம் சர்வஞ்ஞனாகிய ஈசுவரனென்று சொல்லப்படும்.

அகண்டம்.

3.—(சூ-ரை). காலத்தினாலும் தேச (இட)த்தினாலும் வஸ்துவி (பொருளி)னாலும் கண்டிக்க (வேறுபடுத்த)ப் படாதது அகண்டமாம்.

பிரஹ்மம் உற்பத்தி நாசமின்றி (நித்தியமா)யெக்காலத்து மிருப்பதாலும்,கடபடம்போல் ஓரிடத்துமாத்திரமிராது ஆகாசம்போல் எல்லா விடங்களிலும் வியாபித்திருப்பதாலும், கடமும் படமும்போல் வேறுபட்டிராமல் மண் தனது காரியவடிவ கடத்திற்கு வேறுபட்டிராமைபோல் தனது விவர்த்தகாரியவடிவப் பொருளிற்கு வேறுபட்டிராமையாலும் அதற்குக் கால தேச வஸ்துக்களால் முடிவின்றெனக.

சத்து.

முக்காலத்திலும் பொயயென்று நிச்சயிக்கப்படாதது சத்தாம்.

சித்து.

முக்காலத்தும் எல்லாவற்றையு மறிவதாயும் அறியப்பட்டவற்று லறியப்படாததாயு மிருப்பது சித்தாம்.

## ஆநந்தம்.

முக்காலத்தும் மிகுந்த பிரியத்திற்கு விஷயமா யிருப்பது ஆநந்தமாம்.

## மூலப்பிரகிருதி.

பிரபஞ்சத்திற்கு முதற்காரணமா யிருக்கும் மாயை மூலப்பிரக்ருதி யெனப்படும். மூலம்-காரணம், பிர என்றால் சத்துவகுணம், கிரு என்றால் ரஜோகுணம், தி என்றால் தமோகுணம்; ஆகவே, முக்குணங்களுடன் கூடிய மாயை பிரகிருதியாம். இது ஒவ்வோரவசரம் பற்றி அவித்தை, சத்தி, சத்யை, மூலை, துலை, யோனி, அவ்வியக்தம், அவ்வியாகிருதம், அஜை, அஞ்ஞானம், தமம், துச்சை, அநிர்வசநீயை, பின்னை என்றற் றொடக்கத்தனவாகச் சொல்லப்படும். வாசுதேவமநநம் "மூலப்பிரகிருதி யெது வென்றால் வெளுப்பு சிவப்பு, கறுப்பு நூல்களால் திரிக்கப்பட்ட கயிறுபோலச் சத்துவ ரஜஸ் தமோகுணக் கலப்புள்ளதா யிருக்கிறதுதான். இதற்குப் பிரளயமென்றும் மகாசூக்தி யென்றும் பேர்" என்று கூறுவதிங் கறியத்தக்கது.

நிர்விகாரவடிவப் பிரஹ்மத்தில் பிறிதொன் றுண்டாதற்கு ஏதுவாய மின்மைபற்றிப் 'பிரஹ்மத்தினிடத்திலே சுத்தியில் (கிளிஞ்சலில்) ரசிதம் (வெள்ளி) தோன்றினாற்போல மூலப்பிரகிருதி யென்றொரு சத்தி யுண்டாயிற்று' என்று கூறப்பட்டது. கிளிஞ்சலில் வெள்ளி தோன்றிய தெப்படி மித்தையோ அப்படியே பிரஹ்மத்தில் பிரகிருதி தோன்றியதும் மித்தையாம். விசாரணையில் பொய்யாயொழிவது மித்தையாம். விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தம் என்னும் நால்வகை வாதங்களில் இது விவர்த்தவாதமாம். தனது சொரூபத்தை விடாமல் வேறு சொரூபத்தைக் காட்டல் விவர்த்தமாம்.

சிளிஞ்சலானது தனது சொரூபத்தை விடாது வேறுசொரூபமாகிய வெள்ளியைக் காட்டுவதுபோலப் பிரஹ்மமும் தனது சொரூபத்தை விடாது வேறு சொரூபமாகிய மூலப்பிரகிருதியைக் காட்டுமென்பதாம். விகிருதம்-மாறுவது.

## மாயை.

சிந்திக்கக்கூடாத சக்தியுள்ளதாயும் யுக்தியில் அடங்காததாயு மிருப்பது **மாயையாம்**. எது வாஸ்தவத்தி லில்லையோ அது மாயை யெனினு மொக்கும்.

பிரகிருதியின் சத்துவகுணமான மாயை ஈசுவரனுக்குச் சர்வஞ்ஞவுபாதியாயும் காரண சரீரமாயும் இருப்பதென்பதால் இது நீங்கியவிடத்து ஈசுவரன் பிரஹ்மவடிவா யிருப்பதன்றித் தனக்கொரு வடிவமுடையவனா யிருத்த லின்றென்பதாயிற்று. சர்வஞ்ஞவுபாதி என்று கூறினும் இனம்பற்றி மாயை சர்வ காரண முதலியவற்றிற்கும் உபாதியா யிருக்கின்றதென்று கொள்க.

அவை:—சர்வஞ்ஞத்துவம், சர்வேசுவரத்துவம், சர்வநியந்திருத்துவம், சர்வாந்தரியாமித்துவம், சர்வ கர்த்துருத்துவம், சர்வசக்திமத்துவ மென்பனவாம்.

(1) சர்வஞ்ஞத்துவம்-முக்காலத்தும் மாறின்றி யெல்லாவற்றையு மறிதல்.

(2) சர்வேசுவரத்துவம் - சகலப் பிரபஞ்சத்திற்கும் தலைவனா யிருத்தல்.

(3) சர்வநியந்திருத்துவம் - எப்பொருள்களையும் நியமந்தவறாவாறு செய்தல்.

(4) சர்வாந்தரியாமித்துவம் - எப்பொருளிலும் உள்ளீடாய் நிறைந் திருத்தல்.

(5) சர்வகர்த்துருத்துவம் - சகல காரியங்களுக்கும் கர்த்தாவா யிருத்தல்.

(6) சர்வசக்திமத்துவம் - எல்லாச் சாமர்த்தியமு முடைத்தா யிருத்தல்.

உபாதி

ஒரு வஸ்துவைப் பலவஸ்துவைப் போலத் தோன்றச் செய்வதற்குக் காரணமா யிருப்பது உபாதியாம்.

ஈசுவரகாரணசரீரம்.

ஈசுவரகாரண சரீரமான மாயை அவ்யாகிருத மெனப்படும். இஃது ஈசுவரனது சூக்கும சரீரத்திற்கும் ஸ்தூல சரீரத்திற்கும் காரணமா யிருப்பதுபற்றிக் காரணசரீரம் எனப்படுகின்றது. ஈசுவரனது சூக்குமசரீரம் இரண்ணியகருப்ப மென்றும் ஸ்தூலசரீரம் விராட் என்றும் சொல்லப்படும்.

ஈசுவரன்.

(இயல்பாகவே அணிமாதி) ஐசுவரிய முடையவன் ஈசுவரனும். மாயை, மாயையின் அதிஷ்டான (விவர்த்தகாரண) சேதனம் (பிரஹ்மம்), (நிர்மலமான ஜலத்தில் சூரியன் பிரதிபிம்பித்தாற்போல) மாயையிற் பிரதிபிம்பித்துள்ள ஆபாஸ: ஆகிய மூன்றுஞ் சேர்ந்தது ஈசுவர னெனப்படும்.

சலட்சணமாகப் (லட்சணத்தோடு) பிரதி பிம்பித்தல்-அழுக்கின்றிய கண்ணாடியில் முகம் மாறுபாடின்றி (உள்ளபடி) பிரதிபலித்தல் போன்று மாயையில் மாறுபாடின்றி (உள்ளபடி) பிரஹ்மம் பிரதிபலித்தலாம்.

அ - கை.

## ஈசுவரன் சத்துவாதி குணங்களினால் மும்மூர்த்திகளாய் விளங்கலைக் கூறல்.

4.—இந்தச் சத்துவகுண மாயையினிடத்திலே சத்துவத்திற் சத்துவம், சத்துவத்தில் இராசதம், சத்துவத்திற் றாமதமென்று மூன்று குணமுண்டாயின. இவற்றுள், சத்துவத்திற் சத்துவம் பிரதானமாகு (மேற்பட்டு நிற்கு)ம் போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தை இரட்சித்தலால் விஷ்ணுவென்று சொல்லப்படும்; சத்துவத்தி லிராசதம் பிரதானமாகும் போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தைச் சிருஷ்டித்தலால் பிரஹ்மாவென்று சொல்லப்படும்; சத்துவத்தில் தாமதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தைச் சங்காரப் பண்ணுதலால் உருத்திரனென்று சொல்லப்படும். இப்படி மூலப்பிரகிருதியின் சத்துவகுண கற்பனை (அத்தியாசம் அல்லதாவது பொய்த் தோற்றம்)சொல்லப் பட்டது.

4:—(கு-ரை). ஈசுவர னொருவனே சத்துவகுணப் பிரதானத்தால் உலகைக்காக்கும் விஷ்ணுவாயும், இரஜோகுணப் பிரதானத்தால் உலகைப் படைக்குப் பிரஹ்மனும், தமோகுணப் பிரதானத்தால் உலகை யழிக்கும் உருத்திரனுயு மிருக்கிறனென்று கூறுவதால் மூன்று கடவுள் தனித்தனியா யின்றென்பது பெறப்பட்டவாறறிக.

அ - கை.

## ஜீவர்களின் தோற்றமும் அவர்களின் பேதமுங் கூறல்.

5.—இனி மூலப்பிரகிருதியி னிராசதகுணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து அவித்தைகளென்றும் ஜீவகாரண சரீரங்க ளென்றும் ஒன்றற்கொன்று தாரதம்மிய மாக (ஏற்றக்குறைச்சலாக)ச் சொல்லப்படும். இந்த அவித்தைக ளிடத்திலும் மலினசலப் பிரதிபிம்பம் போலப் பிரஹ்மசைதன்யம் பிரதிபிம்பிக்கும். இந் தப் பிரதிபிம்ப சைதன்யங்கள் கிஞ்சிஞ்ஞ ரென் றும், சிதாபாசரென்றும், பிராஞ்ஞரென்றும் சொல் லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் இராச தத்திற் சத்துவம், இராசதத்தி லிராசதம், இராசதத் தில் தாமதமென்று மூன்று குணமுண்டு. இராசதத் திற் சத்துவம் பிரதான மாகும்போது அதிற் பிரதி பிம்பித்த சிதாபாசன் தத்துவஞான நிஷ்டனாவன்; இராசதத்தில் இராசதம் பிரதானமாகும் போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் காமக்குரோத பரனாய்க் கன்மநிஷ்டனாவன்; இராசதத்தில் தாம தம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் சோம்பல் நித்திரை மயக்கங்களை யுடையவனாவன். இப்படி மூலப்பிரகிருதியி னிரா சதகுண கற்பனை சொல்லப்பட்டது.

அவித்தை.

5.—(கு-ரை). இருட்டென்ப தொன்றாகவே யிருந்தும் அது தன் அம்சத்தினால் பலவா யிருத்தல்போன்று மூலப் பிரகிருதியின் ரஜோகுண வடிவ அவித்தை யென்பது ஒன்றாகவே யிருந்தும் அது தன் அம்சத்தினால் பலவா யிருப்பது பற்றி 'இனி மூலப்பிரகிருதியின் இராசதகுணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து அவித்தைக ளென்றும்...சொல்லப்படும்'என்று கூறப்பட்டது. அம்சம்-கூறு.

வித்தையினால் (தத்துவ ஞானத்தினால்) நாசமடைவது அவித்தையாம். "(தேகமே ஆத்மா என்கிற) அபிமானத்தை எது உண்டு பண்ணுகிறதோ அதுதான் அவித்தை" என்று சர்வசாரோபநிடதம் கூறுகின்றது.

ஜீவகாரணசரீரம்.

ஜீவனுக்குச் சூக்கும சரீரமும் ஸ்தூல சரீரமும் உண்டாவதற்குக் காரணமா யிருத்தலால் அவித்தை அவனுக்குக்காரண சரீரமாயிற்று. அவித்தையாகிய காரண சரீர மொழிந்தவிடத்து ஜீவன் பிரஹ்மவடிவாய்ப் போவதன்றித் தனக்கெனவொரு வடிவமுள்ளவனா யிருத்த லின்றென்க.

மலினஜலம் - அழுக்குப்படிந்த நீர். கிஞ்சிஞ்ஞர் - அற்பவறிவுடையவர். சிதாபாசர்-சித்துப்போலி; அஃதாவது சித்துப் போல் விளங்குபவர். பிராஞ்ஞர்- (சுழுத்தியவத்தையின் ஆநந்தத்தை)நன்றாயறிபவர். தத்துவஞானநிஷ்டன்-மெய்ஞ்ஞான நிஷ்டை(சமாதி) யுடையவன்.

வேதாத்தியயனம் பிராஜாபத்தியமுதலிய தவங்களைச் செய்தல், சாத்திரமோதுதல், தத்துவஞான மடைதல், பரி

சுத்தமா யிருத்தல், இந்திரிய நிக்கிரகஞ் செய்தல், தான முதலிய தருமானுஷ்டானம், ஆத்துமத் தியானம் என்னுமிவை சத்துவகுணத்தின் காரியங்களென்றும் - பலனை விரும்பி யாகாதிகளைச் செய்தல், அற்ப விஷயத்திலும் அதைரியப்படுதல், தகாத காரியங்களைச் செய்தல், எப்போதும் விஷயங்களிற் பற்றுள்ளவனாயிருத்தல் என்னு மிவை ரஜோகுணத்தின் காரியங்களென்றும் - பேராசை, எப்போதுந் தூங்குதல், உலோபம், கோட்சொல்லுதல், தெய்வத்தை யொப்புக்கொள்ளாமை, அநாசாரம், யாசகஞ் செய்தல், அஜாக்கிரதை யென்னுமிவை தமோகுணத்தின் காரியங்களென்றும் அறிக.

காமக்குரோதபரன்-காம (விருப்பு)க் குரோதங்(வெறுப்பு) களை மிகுதியாக வுடையவன்.

காமத்தினால் வேட்டையாடுதல், சூதாடுதல், பகலிற் றூங்குதல், வம்பளத்தல், ஸ்திரீலோலனாதல், குடித்தல், பாட்டு, கூத்து, வாத்தியங்களில் விருப்ப முள்ளவனாதல், வீணை திரிச்சல் என்னும் குற்றங்களும், குரோதத்தினால் கோள், துணிவு, துரோகம், பொறாமை, பிறன் குணத்தைச் சகியாமை, பிறர் பொருளை யபகரித்தல், காரண மின்றி யடித்தல், திட்டுதல் என்னுங் குற்றங்களு முண்டாமென்பதிங் கறியத்தக்கது.

கன்மநிஷ்டன் - யானென தென்னும் பற்றுடன் தன் சாதிக்கு விதித்துள்ள கருமங்களையே செய்பவன்.

ஜீவன்.

அவித்தை யந்தக்கரணங்களைப் பற்றி ஜீவிக்குந் தன்மை யுடைமையால் ஜீவனென்று சொல்லப்படுகின்றது. "சீவனத் தாற் சீவனெனல்" என்றார் சிவஞானவள்ளலார்.

அவித்தை, அவித்தையின் அதிஷ்டானசேதனம், (மலின சலத்தில் சூரியன் பிரதிபலித் திருப்பதுபோல) அவித்தையிற் பிரதிபிம்பித்துள்ள ஆபாசம் ஆகிய இம்மூன்றுஞ் சேர்ந்தது ஜீவனென்று சொல்லப்படுகிறது.

ஜீவேசுரர்களநாதியெனல்.

சுத்தப் பிரஹ்மத்தை அஞ்ஞானம் அநாதியாகவே யாசிரயித்துக் கொண்டிருப்பதால் சுத்தப் பிரஹ்மத்திற்கும் அஞ்ஞானத்திற்கு முள்ள சம்பந்தமும் அநாதியேயாம்; அநாதியாகவே, அநாதி சம்பந்தத்தாற் பெறப்படும் ஜீவேச பாவங்களும் அநாதியே. ஆயினும் ஜீவேசுர பாவங்கள் அஞ்ஞானத்தின் அதீன (வச)மா யிருத்தலால் அதன் காரியங்களாகச் சொல்லப் படுகின்றன; அஞ்ஞான மொழிந்தவிடத்து அவை சொரூப மற்றுப் போதலாமென்க.

சிருட்டிக்குமுன் வெளிப்படாது (சுழுத்தியில் உலகம் போல்) பிரஹ்மத்தில் லயப்பட்டிருந்த ஜீவேசபாவங்களும், அவை சித்திப்பதற்கு ஏதுவாயுள்ள மூலப் பிரகிருதியும், சிருஷ்டியின் ஆரம்பத்தில் முறையே வெளிப்பட்டவகையை விளக்கவேண்டி மூலப்பிரகிருதி வெளிப்பட்டவகையும்; அதன் சத்துவ ரஜோகுணங்களின் சம்பந்தத்தினால் சேதனம் ஈசுரனாகவும் ஜீவர்களாகவும் இருக்கும்வகையும் இந்நூல் கூறுவதினால் இதில் யாதும் விரோதமின்றென்க.

மாயைக்கும் அவித்தைக்கும் பேதங் கூறுதல் வேதாந்திகளுள் ஏகதேசிகளின் கொள்கையாம்.

அ - கை.

## ஆவரணத்தின் தன்மையைக் கூறல்.

6—இனி மூலப் பிரகிருதியின் தாமத குணத்திற்கு ஆவரணம் விட்சேபமென் றிரண்டு சத்திகளுண்டு

இவற்றுள், ஆவரணசத்தி யென்பது தத்துவஞானி யையும் ஈசுரனையுந்தவிர மற்ற ஜீவருக்கெல்லாஞ் சரீரத்திரயம் சிதாபாசன் சாட்சிசைதன்யமென்ப வைகளை யொன்றற்கொன்று பேதம் (வேற்றுமை) தெரியவொட்டாமல் மறைக்கும். இதனால் மறை பட்ட ஜீவன் இருபத்தொன்பது தத்துவங்களையு மொருமைப் பாடாக (ஒற்றுமையாக) நானென்றபி மானிப்பன். இந்த அபிமானம் அகங்காரக் கிரந்தி யென்றும் சம்சாரபந்தமென்றும் சொல்லப்படும். சற்குரு கடாட்சத்தினலே இந்த ஆவரணம் நீங்கி இருபத் தொன்பது தத்துவத்திற்கு மொன்றற் கொன்று பேதந் தெரிகின்றதே முத்தி. இப்படி ஆவரணசத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.

பிரகிருதி.

6.—(கு-ரை). ஆவரண விட்சேபசத்திகளையுடையஅநாதி (வியாவகாரிக) பாவரூப பதார்த்தம் **பிரகிருதியாம்.** விசாரணை யில் பிரகிருதியும் அதன் காரியமான உலகமும் பொய்யென நிச்சயிக்கப் படினும், அஞ்ஞானதசையில் பிரகிருதி உலக காரணமாக வுள்ளதுபோற் புலப்படுதலாலே பாவரூப பதார்த் தம் என்று கூறப்பட்டது. ஆவரணம்-மறைப்பு. விட்சேபம்- தோன்றுவது.

**ஈசனுக்குந் தத்துவஞானிக்கும் ஆவரண மில்லாமைக்கும் மற்றையோருக் கஃதுண்மைக்கும் காரணம் கூறப்படுகிறது.**

சுத்த சத்துவகுணமானமாயையில் சலட்சணமாகப் பிரதிபலித் துள்ள சேதனம் ஈசுவரனும். இவ்வீசுவரனுக்கு உபாதியா

யுள்ள மாயை சுத்த சத்துவகுண வடிவா யிருத்தலாலே இயல்பாகவே பிராந்தியின்றும்; இன்றாகவே, ஈசுவரன் இயல்பாகவே பாசத்தினின்றும் நீங்கினவனும். மலின சத்துவகுண மாயை(அவித்தை) யிற் பலவாய்ப் பிரதிபலித்துள்ள சேதனம் ஜீவர்களாம். இச்சீவர்களுக்கு உபாதியாயுள்ள மாயை மலின சத்துவகுண வடிவா யிருத்தலாலே சொரூபத்தை யறியாமையும் தேகாதிப் பிரபஞ்சத்தை யான் எனதென் றபிமானித்தலுமாகிய பிராந்தியுண்டாம். இப்பிராந்தியினையுடைய ஜீவர்களிலொருவன் கீழ்ப்போன ஜன்மங்களிற் செய்துள்ள கருமோபாசனைகளாலே மலம் விட்சேபம் நீங்கி, தனது பிரயத்தன பூர்வகமாகச் சற்குரு அருளினால் சமாதி கூடித் தனது (யதார்த்த) சொரூபாவரணத்தை நீக்கினவிடத்து ஜீவன்முத்தன் அல்லது தத்துவஞானி என்று சொல்லப்படுகிறான். இவ்விருவருக்கும் தமது (யதார்த்த) சொரூபத்தில் மறைப்பின்றாகலான் இவர்களிடத்து ஆவரணமின்றாம். சிதம்பர சுவாமிகள் திருப்போரூர்ச் சந்நிதிமுறையில் "சித்தொரு நான்கிற் பிரமங் கூடத்தன் செப்புமா யாரகி தங்கண், மத்தமி லீச னுயிர் கடா மாயா சகிதங்கள் வழுத்துமிவ் வீசன்,சத்தெனுந் தன்னை மறப்பிலா மையினாற் றகுகதி தேடிலன் சீவன், பொய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான் போரிவா ழாறுமா முகனே" என்று கூறுவதிங் கறியத்தக்கதாம்.

## சரீரத்திரயம்.

சரீரம்-உடல், திரயம்-மூன்று. ஸ்தூல சூக்கும காரண சரீரங்கள் சரீரத்திரயமாம். ஜீரணித்துப் போவதுபற்றிச் சரீரமென்றும், தகிக்கப்படுவதுபற்றித் தேகமென்றும் சொல்லுப்படுகின்றன.

## சிதாபாசன்.

சித்துப்போல் விளங்கும் ஜீவன் சிதாபாசனும். சித்து-அறிவு, ஆபாசம் - போலி. "புண்ணியபாவ கருமானுசாரமா யடைந்திருக்கின்ற தேகத்தைத் தானடையாத தேகம்போன் றெண்ணிக் கொண்டிருக்கின்ற பிராணியாகிய அத்தியாசி (தேகமே ஆன்மாவென் றெண்ணுகிறவன்) தான் ஜீவன்" என்று சர்வசாரோப நிடதங் கூறுகின்றது.

## சாட்சி.

காண்பான் காட்சி காணப்படுவது என்பவைகள் உண டாதலையும் மறைதலையும் அறிகின்றதாயும் தனக்குத் தோன் றுதல் மறைதலில்லாததாயும் சுயம்பிரகாசமாயுமுள்ள சேத னமே சாட்சியாம். இது கூடஸ்தன், பிரத்யகாத்மா, துரி யன், பாரமார்த்திக ஜீவன் என்றற் றொடக்கத்தனவாகச் சொல்லப்படும்.

## இருபத்தோன்பது தத்துவம்.

விசாரணை முகத்துத் தானாகவே காணப்பட்ட தத்துவம் ஒன்றும் விசாரணை யில்லாவிடத்துத் தானாகவும் அஃதுள்ள விடத்துத் தனக்கந்நியமாகவும் காணப்பட்ட தத்துவம் இரு பத்தெட்டாம். சாக்கிராதி மூன்றவஸ்தைக்கும் சாட்சியா யிருக்கின்ற கூடஸ்தன் (பிரஹ்மம்) அவ்வவ்வவஸ்தைகளில் தானாகவே விளங்குவதன்றித் தனக்கந்நியமாக விளங்காமை யான் அஃதே தானாகக் காணப்பட்ட தத்துவமாம். தூலசரீர தத்துவம் 6, சூக்குமசரீர தத்துவம் 20, அவித்தை 1, அவித் தையிற் பிரதிபிம்பித்துள்ள ஜீவன் 1 ஆக இவ்விருபத்தெட் டும் மயக்ககாலத்துத் தானாகவும் தெளிவுக்காலத்துத் தனக் கந்நியமாகவும் விளங்கலின், இவை தானாகவும் தனக் கந்நிய மாகவும் காணப்பட்ட தத்துவங்களாம்.

தத்துவம் என்பது இங்குப் பதார்த்தமென்னும் பொருளாது. 'இதனால் (ஆவரணத்தினால்) மறைபட்ட ஜீவன் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக (ஒன்றாக) நானென் றபிமானிப்பன்' என்று கூறியதனால் ஞானாசாரியன் அனுக்கிரகத்தினால் ஆவரணம் நீங்கிய புருஷன் இருபத்தொன்பது தத்துவங்களில் இருபத்தெட்டுத் தத்துவங்களையும் தானல்லவெனக் கண்டு எப்பொழுதும் தானாகவே காணப்படும் பிரஹ்மவடிவாகவே விளங்குவ னென்பது பெறப்பட்டதென்க.

## அகங்காரக் கிரந்தி.

தானல்லாத வுடம்பை யானென்றுகொள்ளுந் திடவறிவு **அகங்காரக்கிரந்தியாம்.**

அகங்காரம் (உடலில்) யானென்னுந் தன்மையைச் செய்தல். கிரந்தி-முடிச்சு.

## சம்சாரபந்தம்.

தன்னோடு சம்பந்தமில்லாத பொருளை யெனதென்று பற்றச் செய்து அதன் வசப்பட்டிருத்தல் **சம்சாரபந்தமாம்.** அன்றிச், சனன மரணங்களுக் கேதுவாகிய கட்டுச் சம்சார பந்த மெனினும் ஒக்கும். சம்சாரம்-தேகாதிப் பிரபஞ்சம்; பந்தம்-கட்டு.

## சற்குரு.

வேதாந்த சாஸ்திராப்பியாசஞ் செய்து, அதன் பொருளை யுள்ளவாறறிந்து ஜீவப்பிரஹ்ம ஐக்கிய நிச்சயத்தால் ஆத்ம (பிரஹ்ம) 'ஞானியாயிருப்பவரே சற்குருவாம்.'"ஆனாநற் கல்வியறி வடக்கம்வை ராக மாதியாங் குணமுடைச் சற்குரு" என்று வேதாந்தசூளாமணி கூறுவது மிங்கறியத்தக்கது. சத் என்

பது நல்ல என்னும் பொருள் தரும் அடைமொழி. குரு என்பதில் கு என்பதன் பொருள் அஞ்ஞானம்; ரு என்பதன் பொருள் ஞானமாம்; ஆகவே, தத்துவஞானத்தால் அஞ்ஞானத்தை யொழிப்பவர் என்பது அதன் திரண்ட பொருளாம். அன்றிச் சத் (உள்ள) தினுபதேசஞ் செய்பவர் சற்குருவாவர் என்று கூறுதலு மொக்கும்.

## முத்தி.

உயிரானது மருள், மயக்கம், விபரீதவுணர்வு என்றற்றொடக்கத்தனவாகச் சொல்லப்படும் அவிச்சை (அஞ்ஞானம்) என்னும் மாசுநீங்கித் தனதெதார்த்த வடிவமான பிரஹ்மமாக நிற்றலே முத்தியாம். முத்தியென்பதன் பொருள் விடுபடல். இது வீடு என்றும் சொல்லப்படும். இது சற்குரு வருளால் ஆவரணம் நீங்கி இருபத்தொன்பது தத்துவத்திற்கு மொன்றற்கொன் றுள்ள பேதந் தெரிகின்றதினு லுண்டாகும். இருபத்தொன்பது தத்துவத்திற்கும் ஒன்றற்கொன் றுள்ள பேதத்தைத் தெரிகின்றதினு லுண்டாவதாகிய முத்தியை உபசாரவழக்கால் 'இருபத்தொன்பது தத்துவத்திற்கு மொன்றற்கொன்று பேதந்தெரிகின்றதே முத்தி' என்று கூறப்பட்டது. இது காரணம் காரியமாய வுபசாரவழக்கு. இங்குக் காரணம் பேதந்தெரிதல் (விசாரணை); காரியம் முத்தி. ஒன்றன்றன்மையை மற்றொன்றன்மே லேற்றிக் கூறுதல் உபசாரவழக்காம். இங்குக் காரணத்தின் றன்மையைக் காரியத்தின் மேலேற்றிக் கூறியவாறறிக. "பாலை நிலத்திற் றோன்றும் ஜலமுழுதும் பாலைநிலமே தவிர வேறில்லை. மூன்றுலகமும் சகலப் பிரபஞ்சமும் விசாரணையினுல் சின்மாத்திரந்தானே" என்று மகோபநிஷத்து நான்கா மத்தியாயத்திற் கூறுவதிங் கறியத்தக்கதாம். கயிற்றினிடத்தில் பிராதிபாஸிக சத்தையாக

(தோற்றல் மாத்திர இருப்பாக)த் தோன்றியுள்ள பாம்பு (வியாவ காரிக நோக்கில் முற்று மில்லாதிருந்தும்) விசாரணை முகத்து நீங்குவதாக வியவகரிக்கப்படுதல் போன்று சேதனத்தி னிடத்து வியாவகாரிக சத்தையாக (சற்குருவாயிலாக ஆத்ம விசாரஞ் செய்யாதவரை உள்ளதுபோல) த் தோன்றியுள்ள தேகாதிப் பிரபஞ்சம் (பாரமார்த்திக நோக்கில் அஃதாவது உண்மைநோக்கில் முற்றுமில்லா திருந்தும்) விசாரணை முகத்து நீங்கிப்போவதாக விவகரிக்கப் படுகின்றதென்பதை இங்குக் கவனித் தறியவேண்டும்; வேண்டவே, முத்தி விசாரணையா லுண்டாவதாகச் சொல்லப்படினும், விசாரணையின் முடிவில் அது நித்தியமாக விருப்பதாய்ப் பெறப்படுதலால் காரியமாகா தென்க. இவ்வாறு கொள்ளாது முத்தியைக் காரியமென்றே கொண்டால், "யாதுகாரியம் அது நாசமுடையது" என்னும் நியமப்படி முத்தியும் நாசமுடையதா யொழியு மென்க.

மூன்றுகாலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப் படாதது **பாரமார்த்திக சத்தாம்**; ஆத்மஞானத்தினல் பொய்யென்று நிச்சயிக்கத்தக்கது **வியாவகாரிகசத்தாம்**;ஆத்மஞான மில்லாமலே பொய்யென்று நிச்சயிக்கத்தக்கது **பிராதிபாஸிக சத்தாம்.** பிரஹ்மம் பாரமார்த்திகசத்து; மாயையும் அதன் காரியவடிவ வுலகும் வியாவகாரிகசத்து; கட்டையிற் கள்வன், கயிற்றிற் பாம்பு, சொப்பனவுலகு.முதலியன பிராதிபாஸிகசத்து.

அ - கை.

## விட்சேபத்தின் தன்மையைக் கூறல்.

7—இனி விட்சேபசத்தியி னிடத்திலுஞ் சத்த தன்மாத்திரையான ஆகாசம் பிறந்தது; ஆகாசத்தி

லும் பரிச தன்மாத்திரையான வாயுபிறந்தது; வாயுவி லும் ரூப தன்மாத்திரையான அக்கினி பிறந்தது; அக்கினியிலும் ரச தன்மாத்திரையான அப்புப் பிறந்தது; அப்புவிலும் கந்த தன்மாத்திரையான பிருதிவி பிறந்தது. இந்தச்சூட்சுமபஞ்சபூதத்திற்குக் காரணமா யிருக்கின்ற விட்சேப சத்தியி னிடத் திலே தாமதத்திற் சத்துவம், தாமதத்தி லிராசதம், தாமதத்திற் றமதமென்று அற்பங் கருவிருந்தபடியி னாலே அதன்காரியமான இந்தத் தன்மாத்திரையான பஞ்சபூதங்களும் முக் குணத்துடனே பிறந்தன. இந்தப் பஞ்சபூதங்கள் தன்மாத்திரைக ளென்றும், அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூட்சும பூதங்க ளென்றும், முக்குண பூதங்களென்றும் சாத்திரங் களிலே சொல்லப்படும்.

## சூக்குமபூத உற்பத்தி.

7—(சூ-ரை). எச்சமயத்து ஈசுவரன் ஜீவர்களுக்குக் கன்ம பலன் கொடுக்கச் சன்முக (எதிர்முக)மாகின்றாரோ அச்சமயத் துச் சிருட்டி யுண்டாகின்றது. ஈசுவரன் ஜீவர்களுடைய கருமத்தை யொட்டி உயர்ந்த அல்லது தாழ்ந்த போகங்களை அவர்கள் அனுபவிக்குமாறு சிருட்டி பண்ணு மிடத்து மூலப்ர கிருதியின் விட்சேப சத்தியினின்று சப்தகுணத்தோடு கூடிய சூக்கும ஆகாசமும், அவ்வாகாசத்தினின்று பரிசகுணத்தோடு கூடிய சூக்கும வாயுவும், அவ்வாயுவினின்று ரூபகுணத்தோடு கூடிய சூக்கும தேயுவும், அத்தேயுவினின்று ரசகுணத்தோடு

கூடிய சூக்கும அப்புவும், அவ்வப்புவினின்று கந்த(வாசனை)க் குணத்தோடு கூடிய சூக்குமப் பிருதிவியும் உண்டாயின வென்பதாம். "ஈசுவரனது பார்வையினால் தமோகுண வடிவப் பிரகிருதியானது ஆவரணசத்தி விட்சேபசத்தி யென விரண்டாகவாயிற்று. அந்த விட்சேபசத்தியே சூட்சும ஆகாயமாயிற்று; அந்த ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும், தேயுவிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து பிருதிவியு முண்டாயின. அவ்வைந்து பூதங்களுக்கும் சூட்சும பூதங்கள், அபஞ்சீகிருதங்கள், தன்மாத்திரைகள் என்று பெயருண்டு" என்று வாசுதேவமநநம் கூறுவதிங் கொப்பிட்டறியத்தக்கதாம்.

'சத்த தன்மாத்திரையான' என்பதற்குச் சப்த (ஒலிக) குணத்தோடு கூடிய சூட்சும பூதமான என்பது பொருள் 'பரிச தன்மாத்திரையான' என்றற் றொடக்கத்தன வற்றிற்கும் இவ்வாறே பொருள் கொள்க.

அற்பங் கருவிருந்தபடியினாலே - சிறிது கருவாகத் தங்கியிருந்தபடியினாலே.

அ - கை.

அந்தக்கரணத்தின் தன்மையைக் கூறல்.

8—இந்தச் சூட்சும பூதங்களினின்று சூட்சும சரீரங்களுந் தூல பூதங்களும் பிறந்தன. அஃதெங்ஙனென்னில்: ஆகாச முதலான பஞ்ச பூதங்களி னுடைய சாத்விகாம்சத்திலே பூதத்திற் கொவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது அந்தக் கரணமாம்.

இந்த அந்தக்கரணத்தி லாகாசத்தி னம்சங் கூடின தற் கடையாளம்: இந்த அந்தக்கரணமும் ஆகாசத் தைப் போலச் சகலமான கேள்விக்கு மிடங் கொடுத்துத் தரிக்கின்றது; இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு (1) உள்ளமென்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் வாயுவினம்சங் கூடினதற் கடையாளம்: இந்த அந்தக் கரணமும் வாயுவைப் போல அலைகின்றது; இப்படி யலைகின்ற விருத்திக்கு (2) மனமென்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் அக்கினியி னம்சங் கூடினதற் கடையாளம்: இந்த அந்தக் கரணமும் அக்கினியைப் போல இஃதுஇன்னதென்று விளக்கு விக்கின்றது; இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் (3) புத்தியென்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் அப்புவி னம்சங் கூடின தற் கடையாளம்: இந்த அந்தக்கரணமும் அப்பு வைப்போல விடயங்களிற் பற்றியிழுக்கின்றது; இப் படி யிழுக்கின்ற விருத்திக்குச் (4) சித்தமென்று பெயர்.

இந்த அந்தக்கரணத்திற் பிருதிவியினம்சங் கூடின தற் கடையாளம்: இந்த அந்தக்கரணமும் பிருதிவி யைப் போலக் கடினமாக நின்று நானென்று அபி மானிக்கின்றது; இப்படி அபிமானிக்கின்ற விருத் திக்கு (5) அகங்காரமென்று பெயர்.

## சூட்சுமசரீரம்.

8—(சூ-ரை). ஸ்தூல சரீரத்தைப்போன்று ஸ்தூலமாய்த் தோன்றாமையினாலும் சூட்சும பூதத்தினின் றுண்டாயிருத்தலாலும் சூட்சுமசரீரமென்று சொல்லப்படுகிறது. அந்தக்கரண பஞ்சகம், ஞானேந்திரியபஞ்சகம், பிராணாதிபஞ்சகம், கன்மேந்திரிய பஞ்சகமென்னு மிவற்றின் சமுதாயம் சூட்சுமசரீரமாம். இதுலிங்கசரீரமெனவும் நுண்ணுடம்பெனவும் அருவுடம்பெனவும் சொல்லப்படும். சுபாசுபக்கிரியைகளைச் செய்தல், சுகதுக்கவடிவ போகத்தை யனுபவித்தல், பரலோகத்திற்குப் போதல் இகலோகத்திற்கு வருதல், இராக த்வேஷாதிகள் சமதமாதிகள், அந்தமந்தபடுத்துவங்கள் இவைமுதலியன சூட்சும சரீரத்தின் தர்மங்களாம் இந்திரியங்கள் எவ்விதத்தாலும் தத்தம் விஷயங்களைக் கிரகியாமலிருத்தல் அந்தமென்றும், சொற்பமாகக் கிரகித்தல் மந்த மென்றும், தெளிவாகக் கிரகித்தல் படுத்துவமென்றும் சொல்லப்படும். மாத்திரை-பகுதி. அம்சம்-கூறு. பஞ்சகம் - ஐந்து.

## அந்தக்கரணம்.

சூட்சும பூதங்களின் சத்துவ குணத்தின் சமஷ்டியிலிருந் துண்டானது அந்தக்கரணமாம். இஃது உட்கருவியென்றும் சத்துவமென்றும் சொல்லப்படும். உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் இவைகளின் சமுதாயம் அந்தக்கரணமாம்.

## விருத்தி.

அந்தக்கரணத்தின் பரிணாமம் (திரிவு) விருத்தியாம். அது சுகம், துக்கம், காமம், திருப்தி, குரோதம், பொறை,

தைரியம், அதைரியம், நாணம், பயம் முதலியனவாம்; ஆயினும் இங்கு அந்தக்கரணத்தின் கேள்விக் கிடங்கொடுத்தல்; நினைத் தல் முதலிய பரிணாமமே விருத்தியாம்.

### உள்ளம்.

சகலமான கேள்விகளுக்கும் இடங்கொடுக்கும் அந்தக் கரணத்தின் விருத்தியை உள்ளமென்று கூறுவதேயன்றித் தேயுசு என்றுங் கூறுவார். இதற்கு அதிதேவதை-சதாசிவன், ஸ்தானம் - உச்சி.

### மனம்.

பதார்த்தத்தின் சங்கற்ப விகற்ப வடிவ விருத்தி மனமாம். இதற்கு அதிதேவதை - சந்திரன், ஸ்தானம் - கண்டம்.

### புத்தி.

பதார்த்தத்தின் சொரூபத்தை நிச்சயிக்கும் வடிவ விருத்தி புத்தியாம். இதற்குஅதிதேவதை-பிரஹ்மன், ‡ ஸ்தானம்-இருதயம்.

### சித்தம்.

பதார்த்தத்தின் சிந்தனை (ஆலோசனை) வடிவ விருத்தி சித்தமாம். இதற்கு அதிதேவதை - விஷ்ணு, ஸ்தானம் - நாபி (கொப்பூழ்).

### அகங்காரம்.

உடலை யானென் றபிமானிக்கும் வடிவவிருத்தி அகங்காரமாம். இதற்கு அதிதேவதை - உருத்திரன், † ஸ்தானம் - சர்வாங்கமும்.

---

‡ வாசுதேவமதநம் ஸ்தானம் முகமெனக் கூறுகின்றது.

† வாசுதேவமதநம் ஸ்தானம் இருதயமெனக் கூறுகின்றது.

"பஞ்சபூதங்களின் சத்துவ குணாம்சங்கள் சேர்ந்து சத்துவமெனப்படும் அந்தக்கரணத்தை யுண்டுபண்ணுகின்றன. அந்தக்கரணம் ஞானத்திற்குக் காரணமாம். (விஷய) ஞானத்தினுற்பத்தி சத்துவகுணத்தினின்று முண்டாகின்றது; ஆதலால் அந்தக்கரணம் பூதங்களின் சத்துவகுண காரியமாம்; பஞ்ச பூதங்களின் காரியமான ஐந்து ஞானேந்திரியங்களுக்கும் சாதகமாயிருக்கிறது. ஆகையால் பஞ்சபூதங்களும் சேர்ந்து தத்தம் சத்துவ குணங்களால் அந்தக்கரணத்தை யுண்டுபண்ணுகின்றன" என்று விசாரசாகரங் கூறுவதிங் கறியத்தக்கதாம்.

சரீரத்திலுள்ள வுச்சிமுதலியவற்றுடன் உற்பூதமாகாமற் கூடிச் சகலமான கேள்விக்கு மிடங்கொடுத்தல் முதலிய விருத்திகட்குச் சாதனமா யிருப்பது அந்தக்கரண மெனப்படும்.

அ - கை.

## ஞானேந்திரியத்தின் தன்மையைக் கூறல்.

9—இன்னும் ஆகாசமுதலிய பஞ்சபூதங்களினுடைய சாத்விகாம்சத்திலே பூதத்திற் கொவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியமென்று சொல்லப்படும்.

இவற்றுள் (1)சுரோத்திரம் ஆகாசத்தி னம்சமானபடியினுலே ஆகாசத்தின் குணமான சப்தமாத்திரத்தை யறியும்.

(2) துவக்கு வாயுவி னம்சமானபடியினுலே வாயுவின் குணமான பரிசமாத்திரத்தை யறியும்.

(3) சட்சு அக்கினியினம்ச மானபடியினாலே அக்கினியின் குணமான ரூபமாத்திரத்தை யறியும்.

(4) சிங்ஙுவை அப்புவினம்ச மானபடியினாலே அப்புவின் குணமான ரசமாத்திரத்தை யறியும்.

(5) ஆக்கிராணம் பிருதிவியினம்ச மானபடியினாலே பிருதிவியின் குணமான கந்தமாத்திரத்தை யறியும்.

இப்படி ஐந்து மொன்றோடொன்று கூடாத படியினாலே ஒன்று மற்றொன்றன் குணத்தைக் கிரகிக்க வறியாது. அந்தக்கரணத்தி லைந்துமாத்திரையு மொன்றாய்க் கூடினதுகொண்டு அவ்வைந்து ஐந்திந்திரியத்தினாலும் ஐந்து விடயத்தையும் அறியும். இந்தச் சத்துவகுணத்திலுண்டான அந்தக்கரண மைந்தும், ஞானேந்திரியமைந்தும் ஆகப்பத்தும் சாத்விகாம்சமான படியினாலே ஞானசாதனமாயின.

ஞானேந்திரியம்.

9—(கு - ரை).சூட்சும பூதங்களின் சத்துவ குணத்தின் வியஷ்டியிலிருந் துண்டானது ஞானேந்திரியமாம். சரீரத்திலுள்ள காதுமுதலிய பொறிகளுடன் உற்பூதமாகாமற் கூடி வெளி விஷயங்களை யறிவதற்குச் சாதனமா யிருப்பது ஞானேந்திரியமெனப்படும். உற்பூதம் - வெளிப்பட்டுத்தோன்றல். ஞானசாதனம்-அறிகருவி.

## ஞானேந்திரியங்களின் தொழில், அதிதெய்வம், ஸ்தானம் என்பன வருமாறு.

| ஞானேந்திரியம். | தொழில். | அதிதெய்வம். | ஸ்தானம். |
|---|---|---|---|
| சுரோத்திரம் | கேட்டல் | திக்கு | காது |
| துவக்கு | பரிசித்தல் | வாயு | உடம்பு அல்லது தோல் |
| சட்சு | காண்டல் | சூரியன் | கண் |
| சிங்குவை | ருசித்தல் | வருணன் | நா |
| ஆக்கிராணம் | மோத்தல் | அசுவினி தேவதை | மூக்கு |

"ஒவ்வொரு பூதத்தினுடைய சத்துவகுணம்சத்தினின்றும் பஞ்சஞானேந்திரியங்களுண்டாகின்றன. ஆகாயத்தின சத்துவ குணம்சத்தினின்றும் சுரோத்திரமும், வாயுவின் சத்துவ குணம்சத்தினின்றும் துவக்கும், தேயுவின் சத்துவ குணம்சத்தினின்றும் சட்சுவும், அப்புவின் சத்துவ குணம்சத்தினின்றும் சிங்குவையும், பிருதிவியின் சத்துவ குணம்சத்தினின்றும் கிராணமு முண்டாகின்றன. இவ்வைந்தும் ஞானத்திற்குச் சாதனமாயிருப்பதால் ஞானேந்திரியங்களென்று சொல்லப்படுகின்றன. (விஷய) ஞானம் சத்துவகுணத்தினு லுண்டாவதால் இவ்வைந்தும் பூதங்களது சத்துவகுணத்தினு லுண்டாவதாகச் சொல்லப்படுகின்றன. சுரோத்திரேந்திரியம் ஆகாயத்தின் குணத்தை (சத்தத்தை) யறிவதால் ஆகாயத்தினின்று முண்டானதாகச் சொல்லப்படுகிறது. இதுபோன்று எவ்வெப்பூதத்தின் குணத்தை யெவ்வெவ் விந்திரிய மறிகின்றதோ அவ்வப் பூதத்தினின்றும் அவ்வவ் விந்திரிய முண்டானதாகச் சொல்லப்படும்" என்று விசாரசாகரங் கூறுவதிங் கறியத்தக்கதாம்.

அ - கை.

## பிராணாதிவாயுவின் தன்மையைக் கூறல்.

10—இன்னும், ஐந்துபூதத்தினுடைய இராஜதாம்சத்திலே பூதத்திற் கொவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது வியாணாதி பஞ்சவாயுக்களாம்.

இவற்றுள், (1) வியானவாயு ஆகாசத்தி னம்சமானபடியினாலே ஆகாசத்தைப் போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்.

(2) பிராணவாயு வாயுவி னம்சமானபடியினாலே வாயுவைப்போல இருதயத்தி லிருந்து நாசியாதி பரியந்தம் அலையும்.

(3) அபானவாயு அக்கினியி னம்ச மானபடியினாலே அக்கினியைப்போலச் சாடராக்கினியாக வுஷ்ணித்துக் கொண்டு குதத்தைப்பற்றி நின்று உண்ட அன்ன பாணாதிகளை ஜீரணிப்பிக்கும்.

(4) சமானவாயு அப்புவி னம்ச மானபடியினாலே சரீரநடுவான நாபித்தானத்தி னின்றுஉண்ட அன்ன பாணாதி ரசங்களைச் சகலநாடிகளிலும் அப்புவைப் போல இழுக்கும்.

(5) உதானவாயு பிருதிவியி னம்சமானபடியினாலே கண்டத்தைப்பற்றிப் பிருதிவியைப் போலக்

கடினமாகநின்று உண்ட அன்னபானாதிகளைக் கடையும்.

இந்தப் பஞ்ச வாயுக்களையு மன்றி வாந்தி பண்ணி வைக்கின்றவன் நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றவன் கூர்மனென்றும், குறு குறுத்துந் தும்மச் செய்கின்றவன் கிரிகரனென்றும், கொட்டாவி கொள்ளச் செய்கின்றவன் தேவதத்த னென்றும், வீங்கு விக்கின்றவன் தனஞ்செயனென்றும் வேறே ஐந்து வாயுக்க ளுண்டென்று சிலர் சொல்லுவர். இந்த வைந்தும் பிராணனுடைய தொழிலானபடியி னாலே வேறல்ல.

### வியானாதி வாயுக்கள்.

10—(சூ - ரை). சூட்சுமபூதங்களின் இராசத குணத்தின் சமஷ்டியிலிருந் துண்டானது வியானாதி வாயுக்களாம். வாயு-காற்று. வனம் (காடு) என்றுற்போல்வது சமஷ்டி. அநேக பதார்த்தங்கள் (அநேகமாக விஷயமாகாமல்) ஒன்றாக (ஒரு) புத்திக்கு விஷயமாதல் சமஷ்டியாம்.

### வியானன்.

சர்வாங்கத் (உடம்புமுழுவ) திலு மிருந்து தேகத்தை நிறுத்துவிப்பது வியானவாயுவாம். இதற்கதிதேவதை விசுவயோனியாம்.

### பிராணன்.

இருதயத்திலிருந்து உசுவாச நிசுவாசங்களைச் செய்வது பிராணவாயுவாம். இதற்கதிதேவதை விசிட்டன்.

வெளிவாயு உள்ளே பிரவேசித்தல் உசுவாசமாம்; உள்ளிருக்கும் வாயுவை வெளியே விடுதல் நிசுவாசமாம்.

### அபானன்.

குதத்திலிருந்து மலமூத்திரங்களைக் கழியச் செய்வது அபான வாயுவாம். இதற்கதி தேவதை விசுவகர்த்தா.

### சமானன்.

நாபியிலிருந்து உண்ட அன்னசாரத்தைச் சர்வாங்கத்திற் கும் பகுத்துக்கொடுப்பது சமானவாயுவாம். இதற்கதிதேவதை ஐயன்.

### உதானன்.

கண்டத்திலிருந்து வாந்திசெய்விப்பது உதானவாயுவாம். இதற்கதிதேவதை அஜன்.

வியனாதி பஞ்சவாயுக்களையன்றி நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் வாயுக்களைந்தும் வாக்காதி கன்மேந்திரியங்களைத் தொழிற் படுத்துவதற்குக் காரணமாயிருக்கின்றன என்றும், வைரம்பன், முக்கியன், பிரபஞ்சனன், அந்தரியாமி, மகாப்பிராணன் என்னும் வாயுக்களைந்தும் சிவ சமபந்தமாய் அந்தக் கரணத்தைத் தொழிற் படுத்துவதற்குக் காரணமா யிருக்கின்றன என்றும் கூறுவாருமுண்டு.

வியனாதி, நாகாதி, வைரம்பனாதியாகக் கொள்ளுமிடத்து வியானாதி அப்பியந்தர (உள்) வாயு என்றும், நாகாதி பாகிய (வெளி) வாயு என்றும், வைரம்பனாதி சிவசம்பந்தவாயு என்றும் சொல்லப்படும். நாகாதிவாயுக்கள் கன்மேந்திரியத்தையும் வைரம்பனாதிவாயுக்கள் அந்தக்கரணத்தையும் தொழிற்படுத்துகின்றன என்றதனால் வியானாதிவாயுக்கள் ஞானேந்திரியத்தைத் தொழிற்படுத்துகின்றன என்பது பெறப்படுமாறறிக.

"பஞ்சபூதங்களின்சேர்க்கையான ரஜோகுணம்சத்தினின்றும் பிராணனுற்பத்தி யாகின்றது. அந்தப்பிராணன் கிரியா (தொழில்) பேதத்தினாலும் ஸ்தான (இட) பேதத்தினாலும் ஐந்துவிதமா யிருக்கின்றது. (1)எதற்கு இருதயம் ஸ்தானமோ பசி தாகம் கிரியையோ அது பிராணனெனப்படும்; (2) எதற்குக் குதம் ஸ்தானமோ மூத்திரமலங்களைக் கீழ்க்கொண்டுபோதல் கிரியையோ அஃது அபானனும்; (3) எதற்கு நாபி தானமோ எது அன்னபானாதிகள் பசன (சீரண) மாம்படி சமப்படுத்துகிறதோ அது சமானனும்; (4) எதற்குக் கண்டம் ஸ்தானமோ சுவாசம் கிரியையோ அஃது உதானனும்;(5) எதற்குச் சர்வாங்கமும் ஸ்தானமோ அன்ன பானாதிகளின் ரசத்தைச் சகல நாடிகளிலும் இழுத்துக்கொண்டு போதல் கிரியையோ அது வியானனும்" என்று விசாரசாகரங் கூறுவதிங்குக் கவனித்துணரத் தக்கதாம்.

அ - கை.

## கன்மேந்திரியத்தின் தன்மையைக் கூறல்.

11—இன்னும் ஆகாசமுதற் பஞ்சபூதங்களி னுடைய இராஜதாம்சத்திலே பூதத்திற் கொவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கன்மேந்திரிய மென்று சொல்லப்படும்.

இவற்றுள், ஆகாசத்தி னிடமாக (1) வாக்கு வசனிக்கும் ;வாயுவினிடமாகப் (2) பாணி இடுதலேற்றல் செய்யும்; அக்கினியி னிடமாகப் (3)பாதம் நடக்கும்; அப்புவி னிடமாகப் (4) பாயுரு மலசலாதிகளை வெளி

யிலே தள்ளும்; பிருதிவியினிடமாக (5) உபத்தம் சுக
த்தைப் பண்ணும்.

இவ்வைந்தும் தனித்தனியே யிருத்தலால் வேறுதொழில் செய்யமட்டா. வியானுதி வாயுக்கள் ஐந்து மாத்திரையு மொன்றாய்க் கூடினது கொண்டு கன்மேந்திரிய மைந்தின் வழியினாலும் ஐந்துதொழில்களையுஞ் செய்து முடிக்கும். இந்த வாயுக்களைந்தும் கன்மேந்திரியங்களைந்தும் ஆகப் பத்தும் இராசதாம்சமானபடியினாற் கிரியாசாதன மாயின.

## கன்மேந்திரியம்.

11—(சூ - ரை). சூட்சும பூதங்களின் ரஜோகுணத்தின் வியஷ்டியிலிருந் துண்டானது கன்மேந்திரியமாம்.

மரம் என்றாற் போல்வது வியஷ்டியாம்.

அநேக பதார்த்தங்கள் அநேக (பல) புத்திக்கு விஷயமாதல் வியஷ்டியாம். சரீரத்திலுள்ள வாய் முதலியவைகளுடன் அநுற்பூதமாய்க்கூடி வசனித்தலாதி தொழில் இயற்றுவதற்குச் சாதனமாகவிருப்பது கன்மேந்திரிய மெனப்படும். அநுற் பூதம் - வெளிப்படாமை.

ஸ்திரீயினது யோனியிலும் புருஷனுடைய மாணியிலுமுள்ள விஷயாநந்தத்திற்குச் சாதனமான இந்திரியம் உபஸ்தமாம். கிரியாசாதனம்—தொழிற்கருவி.

கன்மேந்திரியங்களின் தொழில், அதிதெய்வம், ஸ்தானம் என்பன வருமாறு:—

| கன்மேந் திரியம். | தொழில். | அதிதெய்வம். | ஸ்தானம். |
|---|---|---|---|
| வாக்கு | வசனித்தல் | அக்கினி | வாய் |
| பாணி | இடுதல் ஏற்றல் | இந்திரன் | கை |
| பாதம் | நடத்தல் | வாமனன் (விஷ்ணு) சூரியனுமாம் | கால் |
| பாயுரு | மலசலாதி விடுதல் | மிருத்யு (யமன்) | குதம் |
| உபத்தம் | சுகஞ் செய்தல் | பிரஜாபதி (பிரமன்) | குய்யம் - ஆண்குறி, பெண்குறி |

"ஒவ்வொரு பூதத்தின் ரஜோகுணாம்சத்தினின்றும் ஒவ்வொரு கன்மேந்திரியமுமுண்டாகின்றது. ஆகாசத்தின்ரஜோகுணாம்சத்தினின்றும் வாக்கும்,வாயுவின் ரஜோகுணாம்சத்தினின்றும் பாணியும், அக்கினியின் ரஜோகுணாம்சத்தினின்றும் பாதமும், அப்புவின் ரஜோகுணாம்சத்தினின்றும் உபஸ்தமும், பிருதிவியின் ரஜோகுணாம்சத்தினின்றும் குதமும் உண்டாகின்றன. கன்மம்-கிரியை. இப் பஞ்சேந்திரியங்களும் கிரியைகளுக்குச் சாதனமா யிருப்பதால் கன்மேந்திரியங்க ளென்று சொல்லப் படுகின்றன. கிரியை ரஜோகுணத்தாலுண்டாவதால் பூதங்களுடைய ரஜோகுணாம்சத்தினின்றும் கன்மேந்திரியங்களின் உற்பத்தி சொல்லப்பட்டது" என்று விசாரசாகரங் கூறுவதிங் கொப்பிட்டறியத் தக்கதாம்.

அ - கை.

## சூட்சுமசரீரத்தின் தன்மையைக் கூறல்.

12—அந்தக்கரணம்-5-ம், ஞானேந்திரியம்-5-ம், வாயுக்கள்-5-ம், கன்மேந்திரியம்-5-ம், ஆக-20-தத்துவமும்

சூட்சுமசரீரமென்று சொல்லப்படும். இந்தச்சூட்சும சரீரம் மாயாப் பிரதிபிம்பனுன ஈசுரனுல் அவித்தை யாப் பிரதிபிம்பரா யிருக்கின்ற சீவர்கள் அனேகராகை யாலவர்களொவ்வொருவருக்கும்வொவ்வொன்ருகச் சிருட்டித்துக்கொடுக்கப்பட்டது. அப்போது பஞ்ச பூதங்களின் சாத்விகாம்சமும் இராசதாம்சமுஞ் செலவழிந்தன; தாமதகுண மாத்திரஞ் சேடித்தது. சூட்சுமசரீரம் வாங்காத சீவருக்கெல்லா மின்னு மொரு சிருட்டிக் காகட்டுமென்று நிறுத்தினுர். இப்படி சூட்சும சரீரகற்பனை சொல்லப்பட்டது.

12—(கு - ரை). பரிமேலழகர் திருக்குறளின் "மற்றுந் தொடர்ப்பா" டென்னுங் குறளின் விசேடவுரையில் "அரு (சூக்கும) வுடம்பாவது பத்துவகை யிந்திரிய வுணர்வோடும் ஐவகை வாயுக்களோடும் காம வினை விளைவுகளோடும் கூடிய மனம்; இது நுண்ணுடம் பெனவும் படும்" என்பர்.

சேடித்தது - மிகுந்துநின்றது.

பரஸ்பரம் தம்முள் பின்னராய்ச் சிருஷ்டிக்கப்படாதவ ராய்ச் சுகதுக்கங்கட் கேதுவான இருவினை (நல்வினை தீவினை) களைச் செய்பவரா யுள்ளவர்கள் சீவர்களாதலின், அவர்கள் இரு வினையின் பயனுன சுகதுக்கங்களை யநுபவித்தற்குக் கருவி யான சூக்கும சரீரத்தையும் அவைகள் புலப்படுதற் கிடமான ஸ்தூலசரீரத்தையும் அடைதற்கு உரியவர்களாவர். அவர்கள் அநாதியா யிருத்தலால் அவர்களுக்கு அச்சரீரங்கள் தொடர்ச்சி யாய் வருதலும் போதலுமா யிருப்பனவாம். இவ்விரண்டனுள் சூக்கும சரீரம் சிருட்டிதோறும் ஈசுவரனுல் ஒவ்வொன்ருகப்

படைத்துச் சீவர்களுக்குக் கொடுக்கப் படுகின்றது; மற்றது பிராரத்தத்தின் பயனை யநுபவித்தற்காகப் படைத்துக் கொடுக்கப்படுகின்றது. பின்னதாகிய ஸ்தூலசரீரமும் சூக்கும சரீரம் பெற்றவர்களுக்கே கொடுக்கப்படும். முன்னதாகிய சூக்குமசரீரமோ கன்மபலத்தை யநுபவித்தற்குரிய பக்குவம் வாய்ந்தவர்களுக்கே கொடுக்கப்படும். இவ்வாறு சரீரத்தைப் பெற்றுவரும் சீவர்களில் கர்மபலத்தை யநுபவித்தற் குரிய பக்குவம் வாராதுள்ளவர்கள் சிருட்டிகாலத்துச் சூக்குமசரீரத் தைப் பெறுதற்குத்தகுதி யில்லாதவரா யிருந்தலால், அவர்க ளுக்கு ஈசுவரன் கர்மபலத்தை யநுபவித்தற்குரிய பக்குவம் வரும் சிருட்டியில் சூக்குமசரீரம் படைத்துக் கொடுத்தல் பற்றிச் 'சூட்சுமசரீரம் வாங்காத சீவருக்கெல்லா மின்னு மொரு சிருட்டிக்காகட்டு மென்று நிறுத்தினர்' என்று கூறப் பட்டது.

சீவர்களது கர்மம்: சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தமென மூன்றுவகையாம். அவற்றுள், சென்ற ஜன்மங்களிற் செய்யப் பட்டுப் பயனை யாரம்பஞ் செய்யாமலிருக்கிற கர்மம் சஞ்சித மாம்; இந்த வர்த்தமான (தற்காலத்துள்ள) ஜன்மத்திற் செய் யும் (எதிர்காலத்துப்பயனைக் கொடுப்பதாகிய) கர்மம் ஆகாமிய மாம்; சென்ற ஜன்மங்களிற்செய்து (இந்த) வர்த்தமான ஜன் மத்திற்குக் காரணமாயுள்ள கர்மம் பிராரத்தமாம். இம்மூவகைக் கர்மங்களில் ஆகாமியம் பயனையாரம்பஞ் செய்யாது அந்தக் கரணத்தை யுபாதியாக வுடைய சாட்சியி (கூடஸ்த) னிடத் துக் கற்பிதமாயுள்ள அஞ்ஞானத்தின் ஆவரணசத்தி வடிவக் களஞ்சியத்தி லிருக்கும்போது சஞ்சிதமெனப்படுகின்றது. ஆகாமியம் (அகங்காரத்திற்குச் சாட்சியினோடுள்ள தாதாத்மிய மென்னும்) பிரமஜ தாதாத்மியத்திலிருக்கும். பிராரத்தம் அஞ்ஞானத்தின் விட்சேபசத்தி வடிவ ஆசிரயத்திலிருக்கும்.

அ - கை.

## தூலபூதத்தின் தன்மையைக் கூறல்.

13.—இனித் தூலபூதவுற்பத்தி சொல்லுகின்ரும். அஃதெங்ஙனெனில்:—மிஞ்சின தமோம்சமா யிருக்கின்ற ஐந்து பூதங்களுள் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப் பகுத்து முதற்பாதி யைந்தனுள் வொவ்வொன்றையும் நந்நான்காகப்பகுத்து இரண்டாம் பாதி யைந்தனுள் தன்னம்சத்(பாகத்)துடனே கூட்டாமல் மற்ற நான்கு பூதத்துடனும் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாக (ஒன்றிலெட்டிலொருபாகமாக)க் கொடுக்கிறது பஞ்சீகரணமென்று சொல்லப்படும்.

இப்படி பஞ்சீகரணம் பண்ணின தூல பூதங்களிலே ஆகாசத்திலே பரிச ரூப ரச கந்தமாகிய நான்கு குணமும் வியாப்பியமான(வெளிப்படா தடங்கி யிருக்கின்ற) படியினுல் அதிருசியமாய்ப் (இந்திரியத்திற்கு விஷயமாகாது) போக நிஜகுணமாகிய சப்தமும், வாயுவிலே ரூப ரச கந்த மாகிய மூன்று குணமும் வியப்பியமானபடியினுல் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சப்தமும் நிசகுணமாகிய பரிசமும், அக்கினியிலே ரச கந்தமாகிய விரண்டு குணமும் வியாப்பிய மானபடியினுல் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சப்த பரிசமும் நிசகுண

மாகிய ரூபமும், அப்புவிலே கந்தகுணம் வியாப்பிய மானபடியினால் அதிரூசியமாய்ப் போகக் காரண குணமாகிய சப்த பரிச ரூபமும் நிசகுணமாகிய ரசமும், பிருதிவியிலே காரணகுணமாகிய சப்த பரிச ரூப ரசமும் நிசகுணமாகிய கந்தமும் தோன்றின.

பஞ்சீகரணவகை.

(13)—(சூ-ரை). ஆகாசத்தை யிரண்டுபாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப் பாகத்தை நான்கு பாகஞ் செய்தும், வாயுவை யிரண்டு பாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப்பாகத்தை நான்குபாகஞ் செய்தும், தேயுவை யிரண்டு பாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப் பாகத்தை நான்குபாகஞ் செய்தும், அப்புவை யிரண்டுபாகமாக்கி யொருபாகத்தை யுள்ளவாறுவைத்து மற்றைப் பாகத்தை நான்குபாகஞ் செய்தும், பிருதிவியை யிரண்டுபாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறுவைத்து மற்றைப் பாகத்தை நான்குபாகஞ் செய்தும் விட்டால் ஒவ்வொரு பூதமும் ஐந்தைந்து பகுப்பினதாம். இப்பூதங்களுள், ஆகாயத்தின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தில் நான்கையுஞ் சேர்க்காமல் ஒன்றை வாயுவின் அரைப்பாகத்தோடும், மற்றொன்றைத் தேயுவின் அரைப்பாகத்தோடும், இன்னொன்றை யப்புவின் அரைப்பாகத்தோடும், பிறிதொன்றைப் பிருதிவியின் அரைப்பாகத்தோடுஞ் சேர்த்தல்வேண்டும்.

இவ்வாறே வாயுவின் அரைப் பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையும் சேர்க்காமல் ஆகாய

முதலியவற்றின் அரைப்பாகத்தோடும், தேயுவின் அரைப் பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப் பாகத்தோடும், அப்புவின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத் தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப்பாகத்தோடும், பிருதிவியின் அரைப்பாகத்தோடு அத னது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாயமுதலியவற்றின் அரைப்பாகத்தோடும் சேர்த்தல்வேண் டும். இவ்வாறு சேர்த்தல் தான் பஞ்சீகரணம். இவ்வாறு பஞ்சீ கரணஞ் செய்துள்ள பூதம் ஸ்தூலபூத மெனப்படுகிறது. ஒவ் வொரு ஸ்தூல பூதத்திலும் தனது சூட்சும பூதத்தின் அம்சம் அரைப்பாகமாகவும் ஏனைய சூட்சுமபூதங்களின் அம்சம் அரைப் பாகமாகவு மிருக்கும்.

"ஐந்துபூ தமுமபத் தாக்கி யவைபாதி நந்நான் காக்கி நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்குங் கூட்ட,வந்தன தூல பூதம்" என்று கைவல்லியநவநீதங் கூறுவதிங் கறியத்தக்கதாம்.

## பூதத்தின் குணவகை.

ஆகாயத்திற்குச் சத்தமும், வாயுவிற்குச் சத்தமும் பரிச மும், தேயுவிற்குச் சத்தமும் பரிசமும் ரூபமும், அப்புவிற்குச் சத்தமும் பரிசமும் ரூபமும் ரசமும், பிருதிவிக்குச் சத்தமும் பரிசமும் ரூபமும் ரசமும் கந்தமும் பிரதான குணங்களாம். ஆகாயத்திற்குச் சத்தமும், வாயுவிற்குப் பரிசமும், தேயுவிற்கு ரூபமும், அப்புவிற்கு ரசமும், பிருதிவிக்குக் கந்தமும் நிசகுண மாம். "பூதத்தன்மையாவது பகிரிந்திரியத்தால் கிரகிக்கப்படும் விசேடகுண முடைமை" என்று தர்க்கநூல் கூறுகின்றது.

பூதங்களின் குணம், வியாபாரம், தர்மம், அதிதேவதை யென்பன வருமாறு.

| பூதம் | குணம். | வியாபாரம். | தர்மம். | அதிதேவதை |
|---|---|---|---|---|
| ஆகாயம் | சத்தம் | இடங்கொடுத்தல் | வெளி | சதாசிவன் |
| வாயு | சத்தம் பரிசம் | உலர்த்தல் | பரிசம் | மகேசன் |
| தேயு | சத்தம் பரிசம் ரூபம் | பாகமாக்கல் | வெப்பம் | உருத்திரன் |
| அப்பு | சத்தம் பரிசம் ரூபம் ரசம் | பிண்டீகரித்தல் (திரட்டல்) | நெகிழ்ச்சி | விஷ்ணு |
| பிருதிவி | சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் | பொறுத்தல் | கடினம் | பிரஹ்மன் |

அ - கை.

தூலசரீரத்தின் தன்மையைக் கூறல்.

14.—சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்கள் பிறந்தாற்போலப் பஞ்சீகரணம் பண்ணின தூல பூதங்களினின்றும் ஆறு தத்துவமாய் நால்வகைப் பிறப்பாய் மூவகைச் சாதியாயிருக்கின்ற தூலசரீரங்கள் பிறந்தன.

(14)—(கு - ரை). பஞ்சீகரணம் பண்ணின-சூட்சுமபூதங் களின் கலப்பாலுண்டாயதான.

தத்துவம் - பதார்த்தம்; பதத்தாற் பெயரிட்டு வழங்குந் தன்மையது பதார்த்தமாம்.

15.—இவற்றுள், ஆறுதத்துவமாவன எவையெனின்:— சர்மம், உதிரம், மாமிசம், சநாயு, அத்தி, மச்சை என் பனவாம்.

நால்வகைத் தோற்றமாவன எவை யெனின்:— சராயுசம், அண்டசம், சுவேதசம் உத்பிசம் என் பனவாம்.

மூவகைச் சாதியாவன எவையெனின்:—இகலோக பரலோக புத்தி (இவ்வுலகத்தி னியல்பையும் சுவர்க் கத்தி னியல்பையும் ஆராய்ந்தறியும் மனவுணர்ச்சி) இருவகையுங் கொடுக்கின்ற மாநுடசரீரம் உத்தம சாதி. பரலோக புத்தியை மறைத்து இகலோகபுத் தியை மாத்திரங் கொடுக்கின்ற பசு பட்சி முதலா னவை மத்திமசாதி. இவ்விரண்டு லோகத்துப்புத்தி யையும் மறைத்திருக்கின்ற மரங் கொடி செடி முத லியன அதமசாதி. இப்படிப் பிருதிவி தத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற்கண்டாற்போல அப்பு அக் கினி வாயு ஆகாசமெனப்பட்ட தத்துவங்களிலும் நிரை நிரையே (முறை முறையே) யிருக்கின்ற பிதிர் லோக, தெய்வலோக, யட்ச கந்தருவலோக, சித்தர்

லோகங்களிற்றோன்றுகிற நட்சத்திரம் சந்திரன்முத லான பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், கந்தருவர், சித்தரென்னப்பட்டவர்க ளெல்லாம் உத்தமஜாதி. காமதேனு, அயிராவதம், அன்னம், கருடன் முதலாயின மத்திமஜாதி. கற்பகவிருட்சம் பாரிசாத முதலாயின அதமஜாதி.

## தூலசரீரம்.

15.—(சூ - ரை). சர்மம் (தோல்), உதிரம் (இரத்தம்), மாமிசம் (சதை-இறைச்சி), சநாயு (நரம்பு), அத்தி (எலும்பு), மச்சை (கொழுப்பு) என்னும் இவைகளா லாக்கப்பட்டது தூல சரீரமாம். "தாய்தந்தைக ளுட்கொள்ளும் உணவினால் ஆறு கோசத்தையுடைய சரீரமுண்டாகின்றது. நரம்பு, எலும்பு, சுவேதநீர் (என்னும்) இவைகள் பிதாவினிடத் திருந்தும் தோல், மாமிசம் இரத்தம் (என்னும்) இவைகள் மாதாவினிடத் திருந்து முண்டாகின்றன" என்று சிவகீதை ஒன்பதாவதத்தி யாயத்திற் கூறுகின்றது. தோல், இரத்தம், இறைச்சி, மேதை (மூளை), எலும்பு, மச்சை, சுவேதநீர் என்னும் எழுவகைத் தாது க்களால் உயிர்க்கிடமாக உடம்பு இயற்றப்பட்டிருக்கிறது என்று கூறுவாருமுளர். ஸ்தம்பம் (தூண்) போன்று பிரத்தி யட்சப் பிரமாணத்திற்கு விஷயமாயும் சர்மம் முதலியவைக ளால் ஆக்கப்பட்டு (உறுப்புகளை யுடையதாயு) மிருப்பது ஸ்தூலசரீரமாம். இதுவே ஜீவன் சுகதுக்கவடிவ போகங்களை யனுபவிப்பதற்கு இடம்; இதனுடைய தர்மங்கள் பெயர், ஜாதி, நிறம், சம்பந்தம், பரிமாணம் (அளவு), பிறப்பிறப்பு முதலான வைகளாம். "சரீரம் ஆன்மாவின் போகத்திற் கிடம். எதனால்

வரைந்துகொள்ளப்பட்ட ஆன்மாவிற்குப்போகம் நிகழும் அது போகத்திற்கிடம்; அதுவே சரீரமென்பதாம். போகமாவது இன்பத்துன்பங்கள் புலப்பட (விளங்க)த் தோன்றல்'' என்று தருக்கநூல் கூறுகின்றது.

தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாகிய மூவகைத் துன்பங்களும் இதற்கேயாம். தன்னைப்பற்றி வருவன (தேகத்தைப் பற்றி வரும்) தலைவலி கால்வலி முதலான துன்பங்கள். பிறவுயிர்களைப்பற்றி வருவன புலி, சிங்கம், பாம்பு முதலியவைகளா லுண்டாகும் துன்பங்கள். தெய்வத்தைப்பற்றிவருவன (தெய்வத்தினல்) இடிவிழுதல் புயலடித்தல் முதலியவைகளா லுண்டாகுந் துன்பங்கள். இவை முறையே ஆத்தியாத்மிகதுக்கம், ஆதிபௌதிகதுக்கம், ஆதிதைவிகதுக்க மெனப்படும். இவ்வாறன்றி ஆத்மாவிற்கு ஸ்தூலதேக வாயிலாக வாதபித்த சிலேத்துமங்களா லுண்டாகின்ற சுரம் முதலியவியாதிகளும், துர்க்கந்தம் குரூபம் முதலானவைகளும் ஆத்தியாத்மிகம் என்றும், ஆத்மாவிற்குச் சூட்சுமதேகத்தினு லுண்டாகின்ற காமக்குரோத முதலியவைகளும் சாந்திதாந்தி முதலியவைகளும் ஆதிதைவிகம் என்றும், ஆத்மாவிற்குக் காரண தேகத்தினு லுண்டாகின்ற தன்னையும் தலைவனையு மறியாமைக் கேதுவாகிய மாயாகாரியமென்னும் அஞ்ஞானம் ஆதிபௌதிகம் என்றும் கூறுதலுமுண்டு.

## நாலவகைத் தோற்றம்.

(1) சராயுஜம்—கருப்பையிற் பிறப்பது; மான், ஆடு, யானை, மனிதன் முதலானவையாம்.

(2) அண்டஜம்—முட்டையிற் பிறப்பது; பட்சி, பாம்பு முதலானவையாம்.

(3) சுவேதஜம்—வியர்வையிற் பிறப்பது; பேன், கொசுகு, புழு முதலானவையாம்.

(4) உத்பிஜம்—நிலத்திற் பிறப்பது; மரம், செடி, புல், பூண்டு முதலானவையாம் (வித்தினின்றும் பூமியைப் பிளந்துகொண்டு வெளிப்படும் தாவரபேதம் உத்பிஜம் என்றறிதல் வேண்டும்).

இவையன்றி மாநஸம் என்பதொன்று முண்டு. மனச் சங்கற்பத்தாலுண்டான தேவராதியோர் மாநஸராவர். பிருகு புலஸ்தியர் முதலியோர் மாநஸர்.

## சாதி.

பலவற்றைத் தொடர்ந்து ஒன்றாய்த் தோன்றுந் தன்மையது சாதியாம். சாதியெனினும் தன்மையெனினும் துவம் எனினும் ஒக்கும்.

இகலோக பரலோக புத்தியுடைய (மானிட)சரீரமும் சூரியாதிசரீரமும் உத்தமஜாதி யுடையனவாம்; இகலோக புத்திமாத்திர முடைய (பசுபட்சி முதலிய) சரீரமும் காமதேனு முதலிய சரீரமும் மத்திமசாதி யுடையனவாம்; இவ்விருலோக புத்தியுமின்றிய (மரங்கொடிமுதலிய) சரீரமும் கற்பகவிருட்ச முதலிய சரீரமும் அதமசாதி யுடையனவாம்.

### 1. இகலோகத்தின் உத்தமசாதி.

மக்களே இம்மைப்பயன், மறுமைப்பயன், வீட்டின் தன்மை யென்னு மூன்றனையு மறிதற் குரியவர்களா யிருத்தல்

பற்றி 'மாநுட சரீரம் உத்தமசாதி' என்று முற் கூறப்பட்டது. "மக்க டாமே யாறறிவுயிரே" என்று தொல்காப்பியங் கூறுகின்றது.

மாநுட சரீரம் மிச்ரகர்மத்தினு லுண்டாகின்றது. (புண்ணிய கருமமும் பாவகருமமு மிகுதி குறைவின்றிச் சமமாய்க் கலப்புற்றுள்ள நிலைமை மிச்ரமாம்). இது உத்கிருஷ்டம், மத்திமம், சாமானியம் என மூன்றுவகையாம்.

நிஷ்காம புண்ணியகர்ம பலத்தினுல் சித்த சுத்தி வந்து, சித்தசுத்திவாயிலாகச்சாதனசதுஷ்டய சம்பத்திவந்து, சாதன சதுஷ்டய சம்பத்திவாயிலாகச் சற்குரு லாபமுண்டாகி, சற்குருலாப வாயிலாகச் சிரவண மனன நிதித்தியாசன முண்டாகி, சிரவண மனன நிதித்தியாசன வாயிலாக அபரோட்ச ஞானம் வந்து, அபரோட்ச ஞான வாயிலாகச் ஜீவன் முத்தி சுகத்தைப் பெறும் சரீரப்பிராப்தி மிச்ரவுத்கிருஷ்ட கருமத்தின் பலனும்.

தனது ஆசிரமத்திற் (நிலைக்)கு உசிதமான காமியகரும யோக்கியமான சரீரப்பிராப்தி மிச்ரமத்திம கருமத்தின் பலனும்.

குஷ்டம், பாண்டு, பெருவியாதி முதலியவைகளை யுடைய சரீரப்பிராப்தி மிச்ரசாமானிய கருமத்தின் பலனும்.

## 2. மத்திமசாதி.

பசு பட்சி முதலானவைகளுக்குச் சப்தாதி விஷயங்களை யறியும் செவியாதி ஐம்புலனுணர்ச்சி யிருப்பினும் பரலோக சாதனத்தைத் தேடும் மனவுணர்ச்சி யில்லாமையினுலே 'பசு பட்சி முதலானவை மத்திமசாதி' என்று கூறப்பட்டது. பசு பட்சி முதலானவற்றிற் சில மனவுணர்ச்சியுமுடையனவாயிருக்

தனவென்று புராணாதிகளுட் கேட்கப்படினும் அஃதீண்டுக் கொள்ளுதல் கூடாது. அம்மனவுணர்ச்சி தெய்வீகத்தாலாயது என்றும் கேட்கப் படுதலாலெனக. இங்கு ஐயறிவுடைய பசு பட்சிமுதலானவை மத்திமசாதியென்று கூறப்பட்டிருப்பினும் இனம்பற்றிப் பரிசவறிவும் இரசவறிவுமுடைய இப்பிசங்குமுத லானவைகளையும், பரிச இரசவறிவோடு கந்தவறிவுமுடைய கறையான் எறும்பு முதலானவைகளையும், பரிச இரச கந்தவறி வோடு உருவ வறிவு முடைய தும்பி வண்டு முதலானவை களையும் கொள்க.

பசு பட்சி முதலானவைகளின் சரீரம் பாவ கர்மத்தினு லுண்டாகின்றது. இதுவும் முற்கூறியபடி மூன்றுவகையாம்.

i. பிராணிகளுக்குத் துன்பத்தை யுண்டாக்கும் தேள், பாம்பு, புலி, கரடி முதலிய சரீரப்பிராப்தி பாவ வுத்கிருஷ்ட கருமத்தின் பலனும்.

ii. எருமை, பருந்து முதலிய சரீரப்பிராப்தி பாவ மத்திம கருமத்தின் பலனும்.

iii. பசு, யானை, குதிரை முதலிய சரீரப்பிராப்தி பாவ சாமானிய கருமத்தின் பலனும்.

## 3. அதமசாதி.

பரிச விஷயத்தை யறிதற்குரிய தொக்கிந்திரிய மன்றி இதர விஷயங்களை யறிதற்குரிய மற்றை யிந்திரியங்களும் பர லோக சாதனத்தைத் தேடும் மனவுணர்ச்சியுமின்றி யிருத்தலா லே 'மரங் கொடி செடி முதலியன அதமசாதி' என்று கூறப் பட்டது. மரங் கொடி செடிகளாகப் பிறத்தலும் பாபகருமத் தின் பலனும். இப் பாவகருமமும் முற்கூறியது போன்று மூன்றுவகையாம்.

i. கள்ளி, பூனைக்காய்ஞ்சி, நாகதாளி முதலியனவாகப் பிறத்தல் பாவ உத்கிருஷ்ட கருமத்தின் பலனும்.

ii. புளியமரம், மாமரம், பலாமரம் முதலியனனவாகப் பிறத்தல் பாவமத்திம கருமத்தின் பலனும்.

iii. அரசு, துளசி, வில்வம், தும்பை முதலியவாகப் பிறத்தல் பாவசாமானிய கருமத்தின் பலனும்.

## I. பரலோகத்தின் உத்தமசாதி.

பிதிர் தேவதைகள், சூரியன் முதலிய தேவதைகள், கந்தருவர், சித்தராதியோரியாவரும் மானுடரால் வணங்கத் தக்கவரா யிருத்தலாலே அவர்கள் சரீரம் உத்தம சாதியென்று சொல்லப்பட்டது. உத்தமம் - மேன்மை.

இவ்வுத்தமசரீரம் புண்ணியகருமத்தினாலுண்டாகின்றது. இப்புண்ணிய கருமமும் மூன்று வகையாம்.

i. இரணியகர்ப்பாதி (பிரஹ்மன்முதலான) சரீரப்பிராப்தி புண்ணிய உத்கிருஷ்ட கருமத்தின் பலனும்.

ii. தேவேந்திராதி சரீரப்பிராப்தி புண்ணிய மத்திம கருமத்தின் பலனும்.

iii. யக்ஷ ராக்ஷஸ கின்னர கிம்புருஷாதி சரீரப்பிராப்தி புண்ணிய சாமானிய கருமத்தின் பலனும்.

## II. மத்திமசாதி.

காமதேனு முதலானவை தேவ வர்க்கத்திற் சேர்ந்தவையே யாயினும் விலங்கு பட்சிகளாக விருத்தலாலே அவற்றின் சரீரம் மத்திமசாதியென்று சொல்லப்பட்டது.

## III. அதமசாதி.

*கற்பகவிருக்ஷ முதலானவை தெய்வீகத்தன்மை யுடையனவாயிருப்பினும் தாவரவடிவமாக விருத்தலாலே அவற்றின் சரீரம் அதமசாதியென்று சொல்லப்பட்டது.*

*அ - கை.*

### கோசத்தின் தன்மையைக் கூறல்.

16.—*இந்தத் தூலசரீரமே அன்னமயகோசமாம். சூட்சுமசரீரம் மூன்று கோசமாயிருக்கும். அஃதெங்ஙனெனின்:—பிராணவாயுவுங்கன்மேந்திரியமுங்கூடிப் பிராணமயகோசமாம். மனமும் ஞானேந்திரியமுங் கூடி மனோமயகோசமாம். புத்தியும் ஞானேந்திரியமுங் கூடி விஞ்ஞானமயகோசமாம். காரணசரீரமே ஆனந்தமய கோசமாம். இப்படிப் பஞ்சகோசஞ் சொல்லப்பட்டன.*

### 1. அன்னமயகோசம்.

16.—(கு-ரை). *மாதா பிதாக்களுண்ட அன்னத்தினாலுண்டாகிய சோணித சுக்கிலங்களால் மாதாவின் உதரத்திலுற்பத்தியாகி, உற்பத்தியானபிறகு பால் முதலிய அன்னத்தினால் விருத்தியடைந்து, மரித்தபின் அன்னமயமாகிய பிருதிவியி லொடுங்கும் ஸ்தூலசரீரமே அன்னமயகோசமாம் இதுதான் சுகதுக்கங்களின் அனுபவமாகிய போகத்திற்கு இடமாயிருக்கிறது. உண்டாதல், இருத்தல், மாறுபடுதல், அதிகரித்தல், குறைதல், நாசமடைதல் என்னும் சட்(ஆறு)பாவ விகாரமும் எச்சரீரத்திற்கு முண்டு.*

## 2. பிராணமயகோசம்.

வாக்காதி கன்மேந்திரிய மைந்துடன் கூடிய பஞ்சப் (ஐந்து) பிராணன் (பிராணவாயு) பிராணமயகோசமாம். அன்னமய கோசத்திற்குள்ளாய், தேகத்திற்குக் கட்டாய், அசைதல் முதலாகிய தொழில்களை யுடைத்தா யிருத்தல் இதன் தர்மமாம்.

## 3. மனோமயகோசம்.

செவியாதி ஞானேந்திரிய மைந்துடன் கூடிய மனம் மனோமயகோசமாம். பிராணமய கோசத்திற்குள்ளாய், காமக் குரோத லோப மோக மத மாற்சரியமென்னும் ஆறுபகைவர்க்கங்களும் சரீரத்தில் நான் என்னும் புத்தியும் மனைவிமக்கள் முதலியோரிடத்தில் எனது என்னும் புத்தியு முடைத்தா யிருத்தல் இதன் தர்மமாம்.

## 4. விஞ்ஞானமயகோசம்.

ஞானேந்திரிய மைந்துடன் கூடிய புத்தி விஞ்ஞானமய கோசமாம். மனோமயகோசத்திற் குள்ளாய், இகபரகரும விஷயஅறிவினைபுடைத்தாய்,கர்த்திருத்துவ அபிமானமுடையதாய், நான் என்னும் சொல்விற்கு (மயக்ககாலத்தில்) பொருளாய், சேதனத்தின் பிரதிபிம்பத்திற் கிடமாயிருத்தல் இதன் தர்மமாம்.

பிராணமயகோசமுதலிய மூன்றும் (போகத்திற் கிடமாகிய ஸ்தூலதேகத்தினு ளிருந்து போகத்தை யனுபவிப்பதற்குச் சாதனமாயுள்ள) சூக்கும சரீரத்தினுளிருக்கும்.

கன்மேந்திரியத்துடன்கூடிய பிராணவாயு தேகத்திற்பூரித்து அதற்குப் பலத்தைக் கொடுத்து இந்திரியங்களை யவற்றின்

காரியங்களிற் பிரவர்த்திக்கும்படி செய்வதா யிருப்பதால் பிரா ணமயகோசம் கேவலம் ரஜோகுணத்தின் அவஸ்தையாம் என் றும், ஞானேந்திரியத்துடன் கூடிய மனம் கர்மேந்திரியங்க ளால் வியவகாரங்களைச் செய்து இச்சை முதலிய ரஜோகுண விருத்தியுடன்கூடியிருப்பதால்மனோமயகோசம்சத்துவ ரஜோ குணங்களின் அவஸ்தையாம் என்றும், ஞானேந்திரியத் துடன் கூடியபுத்தி (நகநுனி முதல் சிகைவரையிலும் சரீரத் தில் வியாபித்துக் கர்த்தாவடிவாயிருந்து) விஷயங்களைப் பகு த்துணர்தல் வடிவாயிருப்பதால் விஞ்ஞானமயகோசம் கேவலம் சத்துவ குணத்தின் அவஸ்தையாம் என்றும் அறிந்துகொள்க.

† "பிரத்தியகாத்ம சைதன்னியசாயையுடனே லோகாந்த குந்தம் போன்றிருக்கும் அகங்காரமும் ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமயகோசமாம்" என்று கூறுவாருமுண்டு.

### 5. ஆனந்தமயகோசம்.

அவித்தை (அஞ்ஞான) வடிவ காரணதேகமே ஆநந்தமய கோசமாம். ஆத்ம(பிரஹ்மத்தின்)சொரூபவடிவ ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய பிரிய மோதப் பிரமோதவிருத்தி

† சூக்குமசரீரதத்துவம் 19 என்பார் உள்ளத்தை மனத்தி லும், 17 என்பார் சித்தத்தை மனத்திலும் அகங்காரத்தைப் புத்தியிலும், 16 என்பார் புத்தியை மனத்திலும் அடக்கிக் கூறுவர். 11 என்பார் பிராணாதி பஞ்சகத்தை விட்டு ஞானேந் திரிய பஞ்சகம் கன்மேந்திரிய பஞ்சகம் மனம் என்பவற் றைக் கொள்வர். அகங்காரத்தைப் புத்தியிலடக்காது வேறாகக் கூறுமிடத்துச் சேதனத்தின் பிரதிபிம்பம் அகங்காரத்தி லிருக்கின்றதென்று கூறப்படுகின்றது.

களின் லயத்திற் கிடமாய், போக்தாவடிவமா யிருத்தல் இதன் தர்மமாம்.

"காரண தேசரூபமான அவித்தையும் ஜாக்கிரத்தில் வனிதாதி விஷயங்களைக் காண்டல் அடைதல் அனுபவித்த லென்பவற்றால் கிரமமாக வுண்டாகும் பிரியம் மோதம் பிரமோத மென்னுந் திரிவித சுகவிருத்தியுங்கூடி யாநந்தமய கோசமாம்" என்று கூறுவது முண்டு.

சாக்கிர சொப்பனங்களில் புண்ணிய கன்மத்தின் பயனை அநுபவிக்க நேர்ந்த விடத்து, புத்திவிருத்தி அந்தர் (உள்) முகமாய் ஆத்ம சொரூப வடிவமாகிய ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தை யடைகின்றது. அப்போது அப் புத்திவிருத்தி பிரிய மோதப் பிரமோத விருத்தியாம். புண்ணிய கன்ம பலபோகம் நிவிர்த்தியாகுங் காலத்தி லுண்டாகுஞ் சுழுத்தி யெதுவோ அதன்கண் அவ்விருத்தி தனது காரணமான அஞ்ஞானத்தில் ஒடுங்குகின்றது; அவ்வஞ்ஞானமே ஆநந்தமயகோசமாமென்பது மேலே கூறியதற்கு விவரமாம்.

இஷ்டமான வஸ்துவைப் பார்த்தவிடத் துண்டாகும் விருத்தி பிரியமாம்; அவ்வஸ்துவின் லாபத்தா லுண்டாகும் விருத்தி மோதமாம்; அவ்வஸ்துவின் போகத்தா லுண்டாகும் விருத்தி பிரமோதமாம்.

அன்னமய கோசம் (ஸ்தூல சரீரம்) சுகதுக்க வடிவபோகத்தை யனுபவித்தற்கு இடமாம்; (இந்திரிய கரணாதி வடிவமா யிருத்தலாலே போகத்தை யனுபவித்தற்குச் சாதானமாயுள்ள சூக்கும சரீரத்தின்கணுள்ள) பிராணமயகோசம் கிரியாசக்தி யுள்ள காரியவடிவமாம்; மனோமயகோசம் இச்சாசக்தியுள்ள

காரண (காரண) வடிவமாம்; விஞ்ஞானமயகோசம் ஞானசக்தியுள்ள கர்த்தா (செய்பவன்) வடிவமாம்; ஆநந்தமயகோசம் போக்தா (போகத்தை யனுபவிப்பவன்) வடிவமாம்.

## கோசம்.

கோசமென்பது கத்தியினி னுறைக்கும், திரவியப் பொக்கிசத்திற்கும், கோசகாரமென்னும் புழுவின் கூட்டிற்கும் இவைபோன்ற பிறவற்றிற்குமாம். கோசமெனினும் உறையெனினும் மூடியெனினுமொக்கும். உறைமுதலானவை கத்திமுதலானவற்றை மறைத்திருத்தல் போன்று அன்னமயாதிகளும் ஆத்மாவை மறைத்திருத்தலினாலே அவைகளும் கோசமென்று சொல்லப்படுகின்றன. மறைத்தல் இருவகையாம்:--ஒன்று யதார்த்தமாய் மறைத்தல்; மற்றொன்று கற்பிதமாய் மறைத்தல். புளியம்பழத்தை யதனது ஒடு மறைத்தல் முன்னதற்கு உதாரணமாம்; கயிற்றிற்றோன்றிய பாம்பு அதனையே மறைத்தல் பின்னதற்கு உதாரணமாம். கயிற்றில் (அத்தியாசமாகத்) தோன்றிய பாம்பு அக்கயிற்றையே மறைத்தல் போன்று ஆத்மாவி (பிரஹ்மத்தி) ற்றோன்றிய அஞ்ஞானவடிவ ஆநந்தமயகோசமும் அதன் காரியவடிவ வேனைய கோசங்களும் அவ்வாத்மாவையே மறைக்கின்றன வென்பது இங்கு அறியத்தக்கதாம்.

அ - கை.

### தூலசரீரத்தில் சூக்குமசரீர மிருக்கும் வகையைக் கூறல்.

17—ஆறு தத்துவமா யிருக்கின்ற தூலசரீரத்திலே இருபது தத்துவமா யிருக்கின்ற சூட்சுமசரீர மிருக்கின்ற தெப்படி யெனின்:—

கன்மேந்திரியங்களுள் வாக்கும் ஞானேந்திரியங்களுள் சிங்ஙுவையும் வாயிலிருக்கும்; வாயுக்களுள் உதானவாயுவும் அந்தக்கரணத்துள் மனமுங் கண்டத்திலிருக்கும்; பிராணவாயுவும் புத்தியும் இருதயத்திலிருக்கும்; சமானவாயுவுஞ் சித்தமும் நாபியிலிருக்கும்; அபானவாயுவும் பாயுருவுங் குதத்திலிருக்கும்; வியானவாயுவும் துவக்கும் அகங்காரமுஞ் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்; உச்சியிலே உள்ளமும், கருவிழி நுனியிலே சட்சு இந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்திர இந்திரியமும், மூக்குநுனியிலே ஆக்கிராண இந்திரியமும் கழுத்திற்குமேற் றனித்தனியேயிருக்கும். கழுத்திற்குக் கீழே கை கால் குய்யங்களில் பாணி பாதம் உபஸ்தமென்னு மூன்றுந் தனித்தனியே யிருக்கும். இப்படி ஸ்தூலசரீர தத்துவம் 6-ம், அதிற் குடிபுகுந்த சூட்சுமசரீர தத்துவம் 20-ம் ஆகத் தத்துவம் 26-ம் பஞ்சபூதத்தின் காரியமான படியினாலே ஒருமைப்பாடாகக் காரியசரீரமென்று சொல்லப்படும்.

17.—(த-ரை). 1. வாயில் (1) வாக்கு (வசனித்தலு)ம் (2) சிங்ஙுவையும் இருக்கும். சிங்ஙுவையென்னும் ஞானேந்திரியம் நாவினுனியிலிருந்து இரசத்தை(கைப்பாதிசுவையை) யறியும்.

2. கண்டத்தில் (3) உதானவாயுவும் (4) மனமும் இருக்கும், தேகத்தில் யானெனுந் தன்மையும், வீடு முதலியவற்றில்

எனவெதனுந் தன்மையும் செய்துகொண்டு செவியாதி யிந்திரிய வாயிலாக வெளியிற் செல்லுவதாய்க் காணவடிவமா யிருப்பது மனமாம்.

3. இருதயத்தில் (5) பிராணவாயுவும் (6) புத்தியு மிருக்கும். ஜாக்கிராவஸ்தையில் நகநுனிமுதல் சிகைவரையிலும் தேகத்தில் வியாபித்துக் கர்த்தாவடிவமா யிருப்பது புத்தியாம்.

4. நாபியி (கொப்பூழி)ல் (7) சமானவாயுவும் (8) சித்தமும் இருக்கும்.

5. குதத்தில் (9) அபானவாயுவும் (10) பாயுரிந்திரியமு மிருக்கும்.

6. உடம்பு முழுதும் (11) வியானவாயுவும் (12) துவக்கிந்திரியமும் (13) அகங்காரமும் வியாபித்திருக்கும்.

7. உச்சியில் (14) உள்ளம் இருக்கும்.

8. கருவிழி நுனியில் (15) சட்சுவிந்திரிய (கண்ணிந்திரிய) மிருக்கும்.

9. காதிற்குள் (16) சுரோத்திரேந்திரிய மிருக்கும்.

10. மூக்கினுனியில் (17) ஆக்கிரா ணேந்திரிய மிருக்கும்.

11. கையில் (18) பாணீந்திரிய மிருக்கும்.

12. காலில் (19) பாதேந்திரிய மிருக்கும்.

13. குய்யத்தில் (20) உபஸ்தேந்திரிய மிருக்கும்.

சர்மம், உதிரம், மாமிசம், சநாயு, அத்தி, மச்சையென் றாறு தத்துவ வடிவமாயிருக்கின்ற ஸ்தூலசரீரத்தில் அந்தக்கரணமைந்து, ஞானேந்திரியமைந்து, பிராணதிவாயுவைந்து, கன்மேந்திரியமைந்து என்றிவ்விருபது தத்துவவடிவமா யிருக்கிற சூட்சுமசரீரம், ஜீவன் போகத்தை யனுபவித்தற்காக ஈசுவர

சங்கற்பத்தினுற் புகுந்ததா மென்றறிக. குடிபுகுதல் - ஸ்தூல சரீரத்தில் ஜீவன் பிராரத்தகன்மத்தின் போகத்தை யனுபவிக்கும்வரை யிருத்தல்.

அ. கை.

ஜீவபரியாய நாமமும் பிரஹ்மபரியாய நாமமுங் கூறல்.

18.—காரண சரீரத்தோடு சிதாபாசன் ஜாக்கிரத்திலே இந்த (தூலசரீரதத்துவம் ஆறு, சூக்குமசரீரதத்துவம் இருபது என்னும்) இருபத்தாறு தத்துவத்துடனே கலந்துநின்றபோது விசுவனென்றும் வியவகாரிக ஜீவனென்றுஞ் சொல்லப்படும்.

சொப்பனத்திலே தூலசரீரத்தைக் கைவிட்டு அந்தக் கரணத்துடன் கூடி நின்றபோது தைஜசனென்றும் பிராதிபாசிக ஜீவனென்றும் சொப்பன கற்பிதனென்றுஞ் சொல்லப்படும்.

சுழுத்தியிலே காரியசரீர தத்துவ மிருபத்தாறையுங் கைவிட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தி யிருக்கும்போது பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திக ஜீவனென்றுஞ் சொல்லப்படும்.

பிரஹ்மசைதன்னியம் ஜாக்கிரத்திற்குச்சாட்சியா யிருக்கும்போது ஜீவாத்மாவென்றும், சொப்பனத்திற்குச் சாட்சியா யிருக்கும்போது அந்தராத்மாவென்றும், சுழுத்திக்குச் சாட்சியாயிருக்கும்போது பரமாத்மா வென்றும், அவஸ்தாத்திரய (ஜாக்கிர சொப்பன சுழுத்தியென்னு மூன்றற்கும்) சாட்சியா

யிருக்கும்போது ஞானாத்மா வென்றுங் கூடஸ்த னென்றுஞ் சொல்லப்படும்.

இப்படி ஜீவனுக்கு மூன்று சரீரமும் மூன்றவஸ் தையுஞ் சொல்லப்பட்டன.

1. † ஜாக்கிரம்.

(18).—(கு-ரை). சொப்பனாவஸ்தை சுழுப்தியவஸ்தை களின் வேறாய் இந்திரியங்களாற் மூன்றும் ஞானத்திற்கும் அதன் வாசனைக்கும் ஆதாரமாயிருக்கும் காலம் ஜாக்கிராவஸ் தையாம். இதில் (ஞானேந்திரியம்-5, கன்மேந்திரியம் 5, அந் தக்கரணம்-4 என்னும்) இந்திரியங்கள் 14, அவற்றின் விஷ யங்கள் 14, அவ்விந்திரியங்களின் அதிதேவதைகள் 14 ஆகிய 42 தத்துவங்களாலும் வியவகாரமுண்டாகும். [இந்திரியங் களை அத்தியான்மமென்றும், விஷயங்களை அதிபூதமென்றும், இந்திரியங்களையியக்கும் தேவதைகளை அதிதேவதை யென் றும் கூறுவர்.]

ஜாக்கிராவஸ்தையில் சிதாபாசவடிவ ஜீவனுக்கு (1) நேத் திரம் ஸ்தானம்; [ஜாக்கிராவஸ்தையில் ஜீவன் சரீரமுற்றும் வியாபித்திருந்தாலும் அதன் விசேஷபாகம் நேத்திரத்திலிருப் பதால் நேத்திரம் ஸ்தானமெனப்பட்டது.] (2) வைகரி - வா க்கு; (3) ஸ்தூலம் --போகம்; (4)கிரியை - சத்தி, (5) குணம் -

---

† (1) இந்திரிய ஜன்னிய ஞானத்தோடு கூடியது ஜாக்கி ராவஸ்தை; (2) இந்திரிய அஜன்னிய விஷயத்தைக் கோசரிக் கும் பிரத்தியட்சமான அந்தக்கரண விருத்தியோடு கூடியது சொப்பனாவஸ்தை, (3) அவித்தையைக் கோசரிக்கும் அவித் தியா விருத்தியோடு கூடியது சுழுத்தியவஸ்தை என்று வேதாந்த பரிபாஷை கூறுகின்றது.

சத்துவம்; (6) ஜாக்கிராபிமானத்தால் விசுவன் என்பதும் வியவகாரிகஜீவன் என்பதும் பெயர்; (7) அகரம் - எழுத்து; (8) தெய்வம்-விஷ்ணுவாம். ஜாக்கிராவஸ்தையில் ஜீவன் சூட்சுமதேகத்தின் அபிமானத்தை விடாது விசுவவடிவ (உலக வடிவ)ஸ்தூலதேகத்தில் நானென்னும் அபிமானத்தையுடைத்தாயிருத்தலாலே விசுவனென்றும், அத்தியான்மம் அதிபூதம் அதிதெய்வம் என்னும் தத்துவங்களெல்லாவற்றோடுங் கூடி வியவகரித்தலாலே வியவகாரிக ஜீவனென்றும் சொல்லப்படுகிறானென்பது. இப்பெயர்களேயன்றித் ஸ்தூலசரீர|வியஷ்டியபிமானி, புத்திப்பிரதிபலன சைதன்னியன், விட்சேபரூபன், க்ஷேத்திரஞ்ஞன், சரீரி, பிரமாத்துரு, கர்த்துரு, போக்துரு, சம்சாரி, விஷயி, பாவாத்மா, விஞ்ஞானமயன், துவம்பத முக்கியார்த்தன் என்றற்றொடக்கத்தனவாய பெயர்களுமுண்டு.

## 2. சொப்பனம்.

ஜாக்கிராவஸ்தையில் எப்பதார்த்தங்களனுபவிக்கப்படுகின்றனவோ அப்பதார்த்தங்களின் சம்ஸ்காரம் (வாசனை) மயிரினுனிப்பாகம் போன்று சூட்சுமமாகக் கண்டத்திலுள்ள ஹிதையென்னும் நாடியிற் றங்குகின்றது. அச் சம்ஸ்காரத்தினால் சப்தாதி பஞ்சவிஷயங்களும் அவற்றின் ஞானமும் முன் பின் தொடர்பின்றி யுண்டாகும் காலம் சொப்பனாவஸ்தையாம்.

சொப்பனாவஸ்தையில் ஜீவனுக்கு (1) கண்டம்-ஸ்தானம்; (2) மத்திமை-வாக்கு, (3) சூட்சுமம் (வாசனாமயம்) - போகம்; (4) ஞானம்-சத்தி; (5) குணம் - இராசதம்; (6) சொப்பனாபிமானத்தால் தைஜசன் என்றும் பிராதிபாசிக ஜீவன் என்றும் சொப்பன கற்பிதனென்றும் பெயர்; (7) உகரம்-எழுத்து;

(8) தெய்வம் - பிரஹ்மாவாம். சொப்பனவஸ்தையில் ஜீவன் சோமசூரி யாக்கினிகளின் சகாயமின்றித் தானே சோமசூரி யாக்கினி வடிவமாக நின்று தன்னிற் றோன்றிய பிறவற்றை யெல்லாம் விளக்கலாலே தைஜசன் (தேஜஸ்வடிவாயிருப்பவன்) என்றும், தத்துவஞானமின்றியே பொய்யென்று நிச்சயிக்கத் தக்கவனாயிருத்தலாலே பிராதிபாசிக ஜீவன் என்றும், ஜாக்கிர வாசனையினாலே சொப்பனத்திற் கயிற்றின்கணரவுபோலக் கற்பிதமாய்த் தோன்றலாலே சொப்பனகற்பிதனென்றும் சொல்லப்படுகிறானென்பது. இப்பெயர்களேயன்றிச் சூட்சும சரீர வியஷ்டி யபிமானி என்றற் றொடக்கத்தனவாய பெயர்களு முண்டு.

3. சுழுத்தி.

கேவலம் சுகமும் அஞ்ஞானமுமுள்ள காலம் சுழுத்தி யவஸ்தையாம். இவ்விரண்டு மிருத்தலினாற்றான் சுழுத்தியினின்று மெழுந்த புருஷன் ஒன்றுமறியாது சுகமா யுறங்கினேனென்று கூறுகின்றான்.

சுழுத்தியவஸ்தையில் ஜீவனுக்கு (1) இருதயம்-ஸ்தானம்; (2) பைசந்தி - வாக்கு; (3) ஆநந்தம்-போகம்; (4) திரவியம்-சக்தி; (5) குணம்-தமசு; (6) சுழுத்தி யபிமானத்தால் பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திக ஜீவனென்றும் பெயர்; (7) மகாரம்-எழுத்து; (8) தெய்வம்-உருத்திரனும். சுழுத்தியவஸ்தையில் ஜீவன் தனதெதார்த்தவடிவ கூடஸ்தனோ டயிக்கமாய்ச் சுகாகாரமா யிருப்பதுடன் ஆண்டுள்ள அஞ்ஞானத்தையும் அறிந்து கொண் டிருப்பதனாலே பிராஞ்ஞன் (நன்றாயறிபவன்) என்றும், அவித்தியோபாதியுடன் யதார்த்தவடிவமாக விருத்தலாலே பாரமார்த்திக ஜீவன் (உண்மையாயுள்ளவன்) என்றும் சொல்லப்படுகிறானென்பது. இப்பெயர்களேயன்றிக் காரண

சரீரவியஷ்டி யபிமானி, அவித்தியோபாதிகன், காரியோபாதிகன் என்றற் றொடக்கத்தனவாய பெயர்களு முண்டு.

இங்குக் கூறிய அவஸ்தை மூன்றனுள் விருட்ச முதலியனவற்றிற்குச் சுழுத்தியும், மிருகாதிகளுக்குச் சுழுத்தியும் சொப்பனமும், தேவர்களுக்கு ஜாக்கிரமும், மனிதர்களுக்குச் ஜாக்கிரமுதலிய மூன்றுமாமென்று வேதாந்த சூளாமணி கூறுகின்றது. மரங்களுக்கு க்ஷீண(குறைந்த) சுழுத்தியுண்டு; மலைமுதலியவற்றிற்குக் காட (அழுத்தமான) சுழுத்தியுண்டு என்று பாலபோதங் கூறுகின்றது.

எதனினின்றும் விழிப்பித்தலின்றித் தானே விழிக்கின்றதோ அது க்ஷீண சுழுத்தியாம்; எதனினின்றும் விழிப்பித்தாலன்றித் தானே விழிக்கின்றதில்லையோ அது காடசுழுத்தியாம்.

ஒரு பெரிய பட்டணம்போன்றது ஜாக்கிராவஸ்தையென்றும், அப்பட்டணத்தினுள் ளிருக்கும் கோட்டைபோன்றது சொப்பனாவஸ்தையென்றும், அக்கோட்டையினுள் ளிருக்கும் வீடுபோன்றது சுழுத்தி யவஸ்தையென்றும் இங்கறியத்தக்கனவாம்.

ஜாக்கிரசொப்பன அவஸ்தைகளிரண்டிலும் அந்தக்கரண விருத்தியும் சுழுத்தியில் † அவித்தியா விருத்தியுமுண்டு. மரணம் மூர்ச்சைகளைச் சிலர் ஜாக்கிரத்திலும் சிலர் சுழுத்தியிலும் அடக்கிக் கூறுவர். சிலர் அவை ஜாக்கிராதியவஸ்தை

---

† சுழுத்தியில் (1) சாட்சி யாகாரமாகவும், (2) சுகாகாரமாகவும், (3) அவஸ்தாஞ்ஞானாகார மாகவும் மூன் றவித்தியாவிருத்தி யுண்டென்க.

மூன்றினும் வேறென்பர். இம்மூன்றவஸ்தையேயன்றித் துரியம் துரியாதீதம் என்றிரண்டவஸ்தைகளுமுண்டு. விஷயவாசனைநீங்கிப் பிரஹ்மத்தைத் தியானஞ்செய்தல் துரியமாம்; பிரஹ்மத்தில் மனம் இலயமாய்ப் போவதே துரியாதீதமாம். இது "மனவழக்கந் தவிர்ந்து பரந்தனைச் சிந்தித்திடலே வரு துரிய மப்பரமான் மாவின்மன மடங்கன், முனமுளைத்தல் செய்துரியா தீதமெனப் புகல்வர்" என்று வேதாந்தசூளாமணி கூறுவதால் நன்கு விளங்கும்.

### பிரஹ்மத்திற்கு ஆன்மா வேறுபட்ட தன்றென்பது.

காலத்தினாலும் தேச (இட)த்தினாலும் அந்தமி (முடிவி) ன்றி யிருப்பது வியாபகமாம். இவ்வியாபக வடிவாயிருப்பது ஆன்மவடிவப் பிரஹ்மமாம். பிரஹ்மம் ஆத்மாவிற்கு வேறாகுமானால்கடபடாதிகள்போன்று அனான்மாவாம். பிரஹ்மத்திற்கு ஆன்மா வேறாகுமானால் பிரஹ்மமும் ஆன்மாவும் தேசத்தினால்முடிவுடையதாம்; தேசத்தினால் முடிவுடையது காலத்தினாலும் முடிவுடையதாம் என்பது நியமமாதலால் பிரஹ்மமும் ஆன்மாவும்கண்டமும் அநித்தியமும் ஜடமுமாம். ஆகவே ஆன்மா வேறு பிரஹ்மம் வேறு என்பது கூடாது; கூடாதாகவே, ஆன்மவடிவ பிரஹ்மம் ஜாக்கிராதி யவஸ்தைகளை முன்னிட்டு ஜீவான்மா வென்றற் றொடக்கத்துப் பெயரை யடைகின்றது.

### ஜீவாத்மா.

கடாவச்சின்ன (கடத்தினால் வளைவுபட்ட) ஆகாயம் போன்று சரீரத்திரயங்களால் அவச்சின்னமா(வளைவுபட்டதா) யிருந்து ஜாக்கிராவஸ்தையில் நாற்பத்திரண்டு தத்துவங்களாலுமுண்டாகும் வியவகாரங்களைத் தொடக்கின்றி (சாட்சியாய்) அறியும் சேதனம் ஜீவாத்மா எனப்படும்.

### அந்தராத்மா.

சொப்பனவஸ்தையில் நிகழும் வியவகாரங்களைத் தொடக்கின்றி யறியும் சேதனம் அந்தராத்மா எனப்படும். அந்தராத்மா-உள்ளீடா யிருக்கும் ஆத்மா.

### பரமாத்மா.

சுழுத்தி யவஸ்தையிலுள்ள அஞ்ஞானவடிவ இருளைத் தொடக்கின்றி யறியும் சேதனம் பரமாத்மா எனப்படும்.

பரமாத்மா-மேலான (உண்மை வடிவ) ஆத்மா. "காய்ந்துள விரும்பு போலுடம் பாதி கலந்துறு குடும்பமென் வழக்கிற், சார்ந்துளன் சீவான் மாவெனப் படுவான் றமரை யிலையினீர் போலத், தோய்ந்துள குடும்பப் பெருவிவகாரந் தோய்வில னந்தரான் மாவாம், போந்துல கிற்குப் பரிதிபோற் சான்றய்ப் பொருந்திஞேன் றன்பர மான்மா" என்று வேதாந்த சூளாமணி கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

### ஞானாத்மா.

அவஸ்தாத் திரயங்களையும் அவை தம்முள் மாறிமாறி வருதலையும் ஓரவஸ்தையில் மற்றைய இரண்டவஸ்தைகளின் அபாவத்தையும் தொடக்கின்றி யறியும் சேதனம் ஞானாத்மா எனப்படும். ஞானம் - அறிவு.

### கூடஸ்தன்.

கூடம் என்பது கொல்லனது பணை. அப்பணையினிடத்து இரும்புகள் விகாரப்படுவதன்றி அது விகாரப்படுவதில்லை; அதுபோல, அவஸ்தாத்திரயங்கள் தம்முள் மாறி மாறித் தன்னிடத்துவரத் தான் விகாரப்படா திருக்கும் சேதனம் கூடஸ்தனெனப்படும். கூடஸ்தன் - கூடம் (பணை) போல் விகாரப்படா திருப்பவன்; சலித்தலில்லாதவனெனினும் ஒக்கும்.

அ - கை.

ஈசுவரனது சரீராதிகளைக் கூறல்.

19.—இனி ஈசுவரனுக்கு (ஸ்தூலசூட்சும காரணமென்னும்) மூன்றுசரீரமும், (ஜாக்கிர சொப்பன சுழுத்தியென்னும்) மூன்றவஸ்தையுஞ்சொல்லப்படுகின்றன. லோககற்பனையா (உலகவியவகாரமா) கத் தோற்றுகின்ற ஸ்தூல பஞ்சபூதங்களும் அவற்றிற்றோன்றின மூன்று சாதியாயிருக்கின்ற ஸ்தூலசரீர சமஷ்டியுங் கூடியது ஈசுவர ஸ்தூலசரீரமென்றும் விராட்டென்றுஞ் சொல்லப்படும்.

இதனு (ஸ்தூலசரீரத்து) டனேகூடி ஜாக்கிராவஸ்தையைப் பொருந்தி யிருக்கின்ற ஈசுவரன் வைசுவானரனென்றும், இந்த இருவகைக்கும் (ஸ்தூலசரீர சமஷ்டிக்கும் ஜாக்கிராவஸ்தைக்கும்) † அதிஷ்டானமா யிருக்கின்ற சைதன்யம் பிரஹ்மா வென்றுஞ் சொல்லப்படும்.

சூட்சுமபூதங்களைந்தும் அவற்றிற்றோன்றின சூட்சுமசரீர சமஷ்டியுங்கூடியது ஈசுவர சூட்சும சரீரமென்றும், இரணியகர்ப்பமென்றும் சொல்லப்படும்.

இத (சூட்சுமசரீரத்தி)னுடனே கூடிச் சொப்பனுவஸ்தையைப் பொருந்தியிருக்கின்ற ஈசுவரன் சூத்திராத்மாவென்றும், இந்த இருவகைக்கும் (சூட்சும சரீரத்திற்கும் சொப்பனுவஸ்தைக்கும்) அதிஷ்

† அதிஷ்டாத்ரு (நியமிக்கின்றதாயுள்ள) சேதனம் என்றும் பாடமுண்டு.

டானமா யிருக்கின்ற சைதன்யம் விஷ்ணு (வியாபக மா யிருப்பவன்) என்றுஞ் சொல்லப்படும்.

இந்த ஸ்தூலசூட்சும மிரண்டின் வாசனை (ஸ்தூல சூட்சும பூதங்களை வெளிப்படுத்தற்குரிய காரணத் தன்மை) யுடனேகூடிய மாயை ஈசுவர காரணசரீர மென்றும், அவ்வியாகிருதமென்றுஞ் சொல்லப்படும்.

இத (காரண சரீரத்தி) னுடனே கூடிச் சுழுத்தி யவஸ்தையைப் பொருந்தி யிருக்கின்ற ஈசுவரன் அந்தரியாமி யென்றும், இந்த இருவகைக்கும் (காரண சரீரத்திற்கும் சுழுத்தி யவஸ்தைக்கும்) அதிஷ்டானமா யிருக்கின்ற சைதன்யம் உருத்திர (சம்சாரரோகத்தை யொழிப்பவ)னென்றுஞ் சொல் லப்படும்.

ஜீவன் தன் மூன் றவஸ்தையிலுந் தன் மூன்று சரீரமாக விருக்கின்ற விருபத்தேழு (தூலசரீரதத் துவம் 6, சூட்சுமசரீர தத்துவம் 20, காரண சரீர தத்துவம் 1, ஆக 27) தத்துவத்துடனும் நானென்று கலந்து நிற்கின்றாற்போல ஈசுவரனுந் தன் மூன்றவ ஸ்தையிலும் தன் மூன்று சரீரமா யிருக்கின்ற முப் பத்திரண்டு (சமஷ்டி ஸ்தூல சரீரதத்துவம் 6, சம ஷ்டிசூட்சுமசரீர தத்துவம் 20, இவற்றின் வாசனை யுடன்கூடிய காரண சரீரமான மாயை 1, ஆகாயாதி பூதங்கள் 5, ஆக 32) தத்துவத்துடனும் கலந்து நிற்பன்'

## விராட்டு.

19.—(கு-ரை.) ஈசுவரனுக்குச் சராசரவடிவப் பிரபஞ்சம் அவயவங்களாகவிருத்தலாலே அது விராட்டு என்று சொல்லப் படுகிறது. "சிரந்துறக்கஞ் செவிதிசைக ளிருசுடர்கள் விழிதீ, பாங்காய முகமுந்தி விசும்புநிலம் பதமாம், பரமனுரு வாய விராட் புருடவடி வெனினும்" என்று வேதாந்த சூளாமணி கூறுவதும்; "ஓ!சகல ஜகத்திற்கு மீசனே!ஓ!விசுவ ரூபத்தைத் தரித்திருக்கின்றவனே! அளவிறந்தகைகள் வயிறுகள் முகங் கள் கண்களையும் அளவிறந்த ரூபங்களையுமுடைய உன்னை எவ் விடத்திலும் பார்க்கிறேன்; உன்னுடைய ஆதியை நான் காண வில்லை; அப்படியே மத்தியத்தையுங்காணவில்லை; முடிவையுங் காணவில்லை" என்று பகவத்கீதை 11 - ம் அத்தியாயத்தில் கண்ணனைநோக்கி அருச்சுனன் கூறுவதும் இங்கறியத் தக் கனவாம். விராட்எனினும் விசுவமெனினும் ஒக்கும்.

### வைசுவானரன்.

சகல பிராணிகளின் சரீரத்திலும் நான்என்று அபிமானத் தை வைத்திருக்கின்றதனாலே ஈசுவரனுக்கு வைசுவானரன் என்று பெயர்வந்தது. ஒவ்வொரு பிராணியும் தனது தனது சரீரத்தை நான்நானென்று அபிமானிப்பது போன்று ஈசுவர னும் சகல பிராணிகளின் சரீரத்தையும் நான் என்று அபிமா னிக்கிறு னென்பது கருத்து. இப்பெயரே யன்றித் தத்பத முக்கியார்த்தன் என்றற் றொடக்கத்தனவாய பெயருமுண்டு. பிராணிகளின் சரீரத்தை ஈசுவரன் நான்என்று அபிமானித் தாலும் அப்பிராணிகளுறுகின்ற சுகதுக்காதி துவந்துவங்களை யுடைதலின்றும். இதனை

"உன்னுதரத் தேகிடந்த கீட முறுவதெல்லா
முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ—மன்னுயிர்க
ளெவ்வகையே சாணிங் கழிவதுவு மாவதுவுஞ்
செய்வகையே நின்றசிவன் பால்."

என்று பெரியார் கூறுவதனாலு மறிக.

அதிஷ்டானம்.

விவர்த்தவடிவ காரியத்தின்காரணம் விவர்த்த உபாதான மாம். அதுவே அதிஷ்டான மெனப்படும். கயிற்றின்கண் விவர்த்தமாய்த் தோன்றிய அரவிற்குக் கயிறு விவர்த்த வுபா தானமாம். கயிறு தனது சொரூபத்தை விடாமலே அரவாகிய வேறு சொரூபத்தைக் காண்பித்தலின் அது விவர்த்த உபா தான (முதற்காரண) மாம். எது (கயிறு) மயக்ககாலத்திற் றோன்று திருக்கின்றதோ எதன் (கயிற்றின்) தோற்றத் தால் மயக்கம் (பாம்பு அதன் ஞானமென்னு மிரண்டும்) நீங்கு கின்றதோ அது (கயிறு) அதிஷ்டானமாம். அதிஷ்டானத் திற்கு விபரீதமான சுபாவமுடைய வேற்றுச் சொரூபம் விவர்த்தமெனப்படும்.

இரணியகற்பம்.

இந்திரியங்களுக்கு விஷயமாவனவும் ஆகாதனவுமாகிய பொருள்களைக் கருவாக வுடையது இரணியகர்ப்ப மெனப் படும். ஈசுவரனது சூட்சும சரீரத்துள் ஸ்தூல பூதங்க ளியாவும் காரணவடிவாக அடங்கியிருத்தல்பற்றி அஃதுஇரணியகர்ப்பம் எனப்பட்டது. இரணியகர்ப்பம் என்பதற்குப் பொன்னிறமான (முட்டையின்)கருப்பம் என்று பொருளாம். "அந்த வித்தான து (பிரகிருதி யானது) சர்வேசுவரனுடைய இச்சையினுலே தங்க(பொன்)நிறமான ஒருஅண்ட(முட்டை) மாயிற்று. அவர்

அவ்வண்டத்தில் முன் ஜனனத்தில் பிரஹ்ம பட்டத்திற்குத் தக்கதபசுபண்ணின ஒருஜீவனைப் பிரஹ்மனாகச் சிருஷ்டித்து அப்பிரஹ்மனுக்குள் அந்தரியாமியாய்ப் பிரவேசித்தார்" என்று மனுதரும சாஸ்திரங் கூறுவதுமிங் கறியத்தக்கதாம்.

## சூத்திராத்மா.

எப்பொருள்களையும் தனது சக்தியினால் சூத்திரதாரி (இயந்திரக்கயி றுடையவன்) போன்றிருந்து இயங்கச் செய்தலாலே ஈசுவரனுக்குச் சூத்திராத்மா என்று பெயர்வந்தது. "சாட்டையிற் பம்பர சாலம் போலெலா, மாட்டுவோனிறை". என்று தாயுமானவர் கூறுவதிங்குக் கவனிக்கத்தக்கதாம். சூத்திரம் - பிரதிமைகளை யியங்கச் செய்தற்குக் காரணமான கயிறு. இச்சூத்திரான்மா என்னும் பெயரேயன்றி மாப் பிராணன் என்றற் றொடக்கத்தனவாய பெயருமுண்டு.

## அவ்வியாகிருதம்.

மாயையானது பிரஹ்மத்தின்கண் அக்கினியிற் சூடு போன்று (சக்தி வடிவாய்ப்) பிரிபடாதிருத்தலாலே அவ்வியாகிருத மெனப்பட்டது. வியாகிருதம் - பிரிக்கப்பட்டது. அவ்வியாகிருதம் - பிரிக்கப்படாதது.

## அந்தரியாமி.

மாலையினுட் கயிறுபோன்றும் சதுர்ப்பூதங்களில் வியாபித்து நிற்கும் விண்போன்றும் எல்லாவற்றிற்கும் உள்ளீடாய் நிற்றல்பற்றி ஈசுவரனுக்கு அந்தரியாமி என்று பெயர் வந்தது. அந்தர்-உள். அந்தரியாமியென்னும் பெயரேயன்றிக் காரணோபாதிகன், மாயோபாதிகன், ஜகத்யோனி, பரன், பரதேவதை என்றற் றொடக்கத்தனவாய பெயர்களுமுண்டு.

அ - கை

ஜீவசேதன முதலியவற்றின் வியாபகத்தைக் கூறல்.

20—ஆகையினால், சிதாபாசன் தன் சரீர மாத்திரமே கலந்து நிற்பன்.

ஈசுவரன் தன்னுடைய சரீரமாகிய சகல சரீரங்களோடுஞ் சகலப் பிரபஞ்சங்களோடுங் கலந்து நிற்பன். இந்த விருவகைக்குஞ் (சிதாபாசனுக்கும் ஈசுவரனுக்கும்) சாட்சியா யிருக்கின்ற பிரஹ்மசைதன்யம் சகல சரீரத்திலுஞ் சகலப் பிரபஞ்சத்திலும் நிறைந்து அப்பாலும் பத்துத்திக்கையும் அதிக்கிரமித்து (மீறி) எல்லையற்றிருக்கும்.

பத்துத்திக்கு.

20--(கு-ரை). கிழக்குமுதலிய வியவகாரத்திற்குக் காரணமாய் ஒன்றாய் வியாபகமா யிருப்பது திக்காம். அது பொருள்களி னிருப்புப்பற்றிக் (1)கிழக்கு, (2)தென்கிழக்கு, (3)தெற்கு, (4) தென்மேற்கு, (5) மேற்கு, (6) வடமேற்கு, (7) வடக்கு, (8) வடகிழக்கு, (9) மேல், (10) கீழ் எனப் பத்துவகையாம். [மேல் - விசும்பு, கீழ் - பாதாளம்.] திக்கு - திசை.

அ-கை.

தத்துவ வியவகாரங்களைக் கூறல்.

21:—ஜீவனுக்கு ஸ்தூலசரீர வியவகாரத்திற்கு அன்னமயமான சட்கோச தத்துவம்-6; சூட்சும சரீரத்

துவம்-20; ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் 5; ஆகத் தத்துவம்-31.

சூட்சும சரீர வியவகாரத்திற்குச் சூட்சும சரீர தத்துவம்-20; ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம்-5; ஆகத் தத்துவம்-25.

காரணசரீர வியவகாரத்திற்குச் ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் ஆகத் தத்துவம்-5.

ஜீவ வியவகாரத்திற்கு ஜீவன், ஈசுவரன், பிரஹ்மம் ஆகத் தத்துவம்-3.

சாட்சி வியவகாரத்திற்குச்சாட்சி-1. ஈசுவரனுக்கு ஸ்தூல சரீர வியவகாரத்திற்குச் சமஷ்டி அன்னமயகோச தத்துவம்-6; சமஷ்டி சூட்சுமசரீர தத்துவம்-20; சமஷ்டி ஜீவன், அவித்தை-2; ஈசுவரன், வித்தை, பிரஹ்மம்-3; ஸ்தூலபூதம்-5; ஆகத் தத்துவம்-36. சூட்சும சரீர வியவகாரத்திற்குச் சமஷ்டி சூட்சும சரீரதத்துவம்-20; சமஷ்டி ஜீவன், அவித்தை - 2; சூட்சுமபூதம்-5; ஈசுவரன், வித்தை, பிரஹ்மம் - 3; ஆகத் தத்துவம்-30.

காரண சரீர வியவகாரத்திற்கு ஈசுவரன், வித்தை, பிரஹ்மம் ஆகத் தத்துவம்-3.

ஈசுவர வியவகாரத்திற்கு ஈசுவரன், பிரஹ்மம்-2.

பிரஹ்ம வியவகாரத்திற்குப் பிரஹ்மம்-1.

இந்திரிய வியவகாரத்திற்கு இந்திரியம் - 1; சட்கோச தத்துவம் - 6; அந்தக்கரணம் - 5; வாயு-5; ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் - 5; ஆகத் தத்துவம்-22.

மனோராச்சிய (மனோவியாபார) வியவகாரத்திற்கு (உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும்) அந்தக் கரணம்-5; ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம்-5; ஆகத் தத்துவம்-10,

இப்படித் தத்துவங்களின் தோற்றமு (சிருஷ்டியு)ம் நிலை (ஸ்திதி) யுஞ் சொல்லப்பட்டன.

அன்னமயமான சட்கோசம்.

21:—(கு-ரை). அன்னத்தினு லுண்டாகிய (ஸ்தூல சரீரத்தின்) சர்மாதி கூட்டமாறும் ஆத்மாவிற்குக்கோசம் (உறை) போ லிருப்பதால் சட்கோசதத்துவம் எனப்பட்டன. சட்கோசம்-ஆறு உறை.

அவித்தை.

தேகமே ஆத்மா என்னும் அபிமானத்தை யுண்பெண்ணுவதுதான் அவித்தை (அஞ்ஞானம்).

வித்தை.

தேகமே ஆத்மா என்னும் அபிமானத்தை நிவிர்த்தியாக்குவதுதான் வித்தை (ஞானம்).

## சாட்சி.

அந்தக்கரணத்தை யுபாதியாகவுடைய சேதனம், அல்லது உதாசீனமாய்ச் சமீபத்தி லிருந்துகொண் டறிவதாகிய சேதனம்; அல்லது அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலு முள்ள சேதனமாத்திரம் சாட்சியாம்.

## சிருஷ்டிவகை.

வேதாந்த சித்தாந்தத்துள் உத்தம மத்திம கனிஷ்ட அதிகாரிகளுக் குஅறிவிக்கும்பொருட்டு அஜாதவாதம்,†யுகபத் சிருஷ்டிவாதம், கிரம சிருஷ்டிவாதமென மூன்று பட்சங்களுண்டு. (1) உண்மையாக வுள்ளது பிரஹ்மமே; தேகாதிப் பிரபஞ்சம் எக்காலத்தும் இன்றென்னும் பட்சம் அஜாதவாதமாம்; இதுவே அதனது முடிந்ததீர்ப்பாம். (2) சொப்பனவுலகு கிரமமின்றி மனத்தினின்று முண்டாவதுபோன்று தேகாதிப் பிரபஞ்சம் கிரமமின்றிப் பிரஹ்மத்தினின்று முண்டாயிற்றென்னும் பட்சம் யுகபத் சிருஷ்டியாம். (3)மாயையின் தமோகுணவடிவப் பிரகிருதியின் விட்சேபத்தினின்றும் ஆகாயாதி சூட்சும பூதங்களும், அவற்றின் சத்துவ இராசத குணங்களினின்றும் சூட்சும தேகமும், தமோகுண மாத்திரமுடைய சூட்சும பூதங்கள் பஞ்சீகரணப் படுதலால் ஸ்தூல பூதங்களும்- அவற்றால் பூலோகம், புவலோகம், சுவலோகம், ஜனலோகம்,

---

† இதனைத் திருஷ்டி சிருஷ்டிவாதமென்பர். அஃதாவது கயிற்றின் கணரவும் அதன் ஞானமும் முன் பின் தொடர்பின்றி யேககாலத்துண்டாதல் போல்வதாம். ஈண்டுத் திருஷ்டி யென்பது அவித்தியா விருத்திவடிவ ஞானம்; சிருஷ்டி யென்பது அதன் சமகாலத்தில் நாமரூபந்தோன்றல்.

தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்றேழு மேலுலகங்களும்; அதல, விதல, சுதல, தராதல, ரசாதல, மகாதல, பாதாளம் என்றேழு கீழுலகங்களும் அவ்வுலகங்களுள ஜீவர்களது போகத்திற்குத் தகுதியான அன்னாதிகளும் போகத்திற்கு ஸ்தானமான தேவ மனுஷிய பசுபட்சி முதலிய ஸ்தூல சரீரங்களு முண்டாகின்றன என்னும் பட்சம் கிரம சிருஷ்டியாம். இப்புத்தகத்தில் இதுகாறும் கூறிவந்த சிருஷ்டி கிரம சிருஷ்டியாம். இச்சிருஷ்டி கனிஷ்டாதிகாரியின் பொருட்டுச் சொல்லப்பட்டதாம். அஜாதவாதமே உடன் பாடாகக்கூறும் வேதாந்த சித்தாந்தத்திற்குக் கிரம சிருஷ்டியையும் யுகபத் சிருஷ்டியையும் கூறுவதில் கருத்தின்றாயினும் மத்திமாதிகாரியும் கனிஷ்டாதிகாரியும் அத்வைதப் பிரஹ்மத்தை யறிவதற்காக ஏகத்தை நிஷேதிக்கவேண்டி யிருத்தலால் அதுபற்றி அந்த இருவகைச் சிருஷ்டியையும் கூறிற்று.

பிரஹ்மவிசாரத்தினால் யதார்த்தஞான முண்டாகாதவனுக்குக் காரியத்தைக் காரணத்து ளடக்குதல் வடிவ லயசிந்தனையின் நிமித்தம் உற்பத்திக்கிரமம் சொல்லப்பட்டது. லயசிந்தனையால் அத்வைதப் பிரஹ்மத்தினிடத்துப் புத்தி ஸ்திரப்படுவது பற்றிக் கிரம சிருஷ்டியும் சொல்லவேண்டியதாயிற்று.

அ - கை.

## தத்துவங்களின் லயக்கிரமங் கூறல்.

22.—இனித் தத்துவங்க ளொடுங்கும் (தத்தங் காரணங்களு ளடங்குகின்ற) வழி சொல்லுகின்றோம். அஃதெங்ஙன மெனின்:—

சகல ஜீவர்களிடத்திலு மிருக்கின்ற ஸ்தூலசரீரங்களனைத்தும் தமக்காதாரமான ஸ்தூல பூதங்களிலே மடிந்து(முன்னிலைமை விட்டுப்) பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்த ஸ்தூலபூதங்களும் பஞ்சீகரணை (கலப்பு) விட்டுத் தன்மாத்திரையான(சூட்சுமமான) தமோகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலப் இரணிய கர்ப்பாவஸ்தை (சூட்சும பூதங்களாயிருக்கும் நிலை) யென்று சொல்லப்படும். சூட்சும சரீர தத்துவங்களிருபதுங் கட்டு(நிலை)விட்டுப் பூதங்களினுடைய சத்துவ குணமும் இரஜோ குணமுமாக வொடுங்கும். அஃதெங்ஙனமெனின்:—

சகலப் பிராணிகளிடத்திலு மிருக்கின்ற அகங்காரமும், ஆக்கிராணமும், உதானனும், உபத்தமும் பிருதிவியி லொடுங்கும். சித்தமும், சிங்குவையும், சமானனும், பாயுருவும் அப்புவிலொடுங்கும். புத்தியும், சட்சுவும், அபானனும், பாதமும் அக்கினியி லொடுங்கும். மனதும், துவக்கும், பிராணனும், பாணியும் வாயுவிலொடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தி லொடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாம். இந்தச் சூட்சும பூதங்களுள், பிருதிவி அப்புவிற் கரைந் தொடுங்கும். அப்பு வும் அக்கினியிற் சுவறி (வற்றி) யொடுங்கும். † விளக்குப்போல அக்கினி

† விளக்குக் காற்றுலணைந் தொடுங்குவது போல.

யும் வாயுவி லிணைந் தொடுங்கும். வாயுவும் ஆகாசத்தி லோய்ந் தொடுங்கும். ஆகாசமும் விட்சேபசத்தியி லொடுங்கும். ஆவரண சத்தியும் விட்சேப சத்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய் ஆலமரம் ஆலவித்தி லொடுங்கினாற் போல இன்னுமொரு சிருட்டிக்கு வித்தாக மாயையிலும் அவித்தையிலும் ஒடுங்கும். அந்த மாயையும் அவித்தையும் அதிநுண்மையான (மிகவும் சூட்சுமமான) மூலப் பிரகிருதியென்று சொல்லப்படும் விந்துதத்துவத்தி லொடுங்கும். அந்த விந்துவும் பாம்பென்கிற பெயர் போய்ப் பழுதையாய் (கயிறாய்)க் கண்டாற் போலத் தனக்கதிட்டானமான பிரஹ்மசைதன்ய மாத்திரமாக வொடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் (தேகாதிப் பிரபஞ்ச மெல்லாம்)மெய்ப்பொருளொன்றாகக் கண்டு அதுவேசுபாவசித்தமாய் நிசமாக விருக்கின்ற தன் வடிவென (தனதுநிசவடிவென)க் கண்டு தெளிந்து கவலை (தேகாதிப்பிரபஞ்சத்தா லுண்டாகின்ற வருத்தம்) கெட்டிருக்கின்றவனே ஜீவன் முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

22;--(கு - ரை.) I. அந்தக்கரணத்து ளொன்றான (1) அகங்காரமும், ஞானேந்திரியத்து ளொன்றான (2)ஆக்கிராண (மூக்கிந்திரிய)மும், பஞ்சவாயுவினுளொன்றான (3)உதானவாயுவும், கருமேந்திரியத்துளொன்றான (4) உபத்த இந்திரியமும்,

சூட்சும பூதங்களு மொன்றான பிருதிவியின் காரியமான தால் அதிலொடுங்கின; காரியம் தன் (மூதற்) காரணத்தின் லயமாமென்னும் நியமமிருத்தலாலெனக.

II. (5) சித்தமும், (6) சிங்குவையும், (7) சமானவாயுவும் (8) பாயுருவும் அப்புவின் காரியமானதால் அதிலொடுங்கின.

III. (9) புத்தியும், (10) சட்சுவும், (11) அபானவாயுவும், (12) பாதமும் அக்கினியின் காரியமாதலால் அதிலொடுங்கின.

IV. (13) மனமும், (14) துவக்கும், (15) பிராணவாயுவும், (16) பாணியும் வாயுவின் காரியமாதலால் அதிலொடுங்கின.

V. (17) உள்ளமும், (18) சுரோத்திரமும், (19) வியானவாயுவும், (20) வாக்கும் ஆகாயத்தின் காரியமாதலால் அதிலொடுங்கின.

## ஆரோபம் அதிஷ்டானத்தி லடங்தும்வகை.

கயிற்றில் ஆரோபமாக (கற்பனையா)கத் தோன்றிய அரவு (பிராந்தியுள்ள சமயத்து) ஓலைதுபோன்றும் நகர்வது போன்றும் இருப்பினும் முடிவில் (பிராந்தி நீங்கிய சமயத்து) அது தனக்கதிஷ்டானமான கயிற்றி லடங்கிப் போதலால் கயிறே விளங்குதல் போன்று பிரஹ்மத்தில் ஆரோபமாகத் தோன்றிய (கீழ் கீழ் தோன்றிய தத்துவங்களை நோக்க அதி நுண்மையாயுள்ள) விந்துதத்துவ மெனப்படும் பிரகிருதியும் (பிராந்திகாலத்துத்)தேகாதிப் பிரபஞ்ச காரிய ஜாலங்களுக்குக் காரணமாதல்போன் றிருப்பினும் முடிவில் (பிராந்தி நீங்கிய காலத்து)அது தனக் கதிஷ்டானமான பிரஹ்மத்தி லடங்கிப் போதலால் பிரஹ்மமே மிஞ்சி விளங்கா நிற்குமென்பது.

"தண்டத்தை நோக்கி யீது சர்ப்பமென் றிடும்பி ராந்தி
தண்டஞா னத்தாற் றீரிற் றகவிது வென்ற வொன்றே
தண்டமா னதுபோ லாரோர் பிதமான சமுசா ரிக்குத்
தண்டமை யுணர்ச்சி யாலே தத்துவம் பிரம மாகும்".
என்று சூதசங்கிதை கூறுவதிங் கறியத்தக்கதாம்.

ஜீவன்முத்தன்.

ஜீவத்துவம் (யானெனதென்னு மபிமானம்) விடுபட்டவன் ஜீவன் முத்தனும்.தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்கப் பிரஹ்ம சொரூபமாக நிலைத்தல் ஜீவன் முத்தியாம். ஜீவன்முத்தனுக்கு அவித்தையின் ஆவரணம் விட்சேபமென்னும் சத்திகளிரண்டனுள் சம்சார பரம்பரைக்குக் காரணமான ஆவரணமானது தத்துவ ஞானத்தினல் நசித்தும் விட்சேப (அவித்தியாலேச) மானது (வறுத்த விதைபோன்று) விதேக முத்திவரையில் பிராரத்தத்தினல் நசியாம லிருத்தலினல் அதுபற்றி அவனுக்கு (விட்சேப சத்தியின் காரியமான) தேகாதிப் பிரபஞ்சம் (பொய்யென்று நிச்சயிக்கப்பட்ட கானனீர் மீண்டுந் தோன்றுதல் போன்று) தோற்றிக்கொண் டிருக்கின்றதென்பது.

"திரிசிய மாம்ப வஞ்சந் தேய்ந்துசொப் பனம்போற் றோன்ற
வுரியவெம் பால்வி ழித்தோ னொருவனே சீவன் முத்தன்"

என்று சூதசங்கிதை கூறுவதிங் கறியத்தக்கது.

தேகாதிப் பிரபஞ்சம் பொய்யாகவேனுந் தோற்றுதலின்றி (முற்றுமின்றி)ப் பிரஹ்மசொரூபமாக நிலைத்தல் விதேகமுத்தியாம். ஸ்தூல சூக்கும காரணமென்னும் மூன்று தேகமும் நீங்கப்பேரதல் விதேக முத்தியென்று கூறினு மொக்கும்.

"பூயச் சாந்தே விசுவமாயா நிவிர்த்தி:—
முடிவில் மீண்டும் தேகாதிகாரியமாகிய விசுவமாயா நிவிர்த்தி யுண்டாகின்றது" என்று சுருதி கூறுவது இதற்குப் பிரமாணமாம்.

அ - கை.

### தத்துவ வகையைக் கூறல்.

23:—இப்படித் தோன்றி யொடுங்குகின்ற தத்துவம் 36. அவையெவையெனின்:—பூதம் - 5, ஸ்தூலசரீர தத்துவம்-6, சூட்சும சரீரதத்துவம்-20, காரண சரீரமான மாயை அவித்தை-2, இவற்றிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் ஜீவன் - 2, இவற்றிற் கெல்லாம் அதிட்டான சைதன்யமா யிருக்கின்ற பிரஹ்மம்-1 ஆகத் தத்துவம்-36.

23:—(கு - ரை). தோன்றியொடுங்குகின்ற தத்துவம் 36 என்று கூறியதில் தோன்றுவதும் ஒடுங்குவதுமாயுள்ள தத்துவம் 35 என்றும் அவற்றிற்கு அதிஷ்டானமான (விவர்த்தவுபாதானகாரணமாயுள்ள) தத்துவம் (பிரஹ்மம்) 1 என்றும் கொள்க.

ஈசுவரனுக்குக் காரண சரீரம் மாயை. ஜீவனுக்குக் காரண சரீரம் அவித்தை.

அ - கை.

### பொதுத் தத்துவ மின்னதென்றும் சிறப்புத் தத்துவ மின்னதென்றும் கூறல்.

24:—இவற்றுள், பூதம் - 5, மாயை-1, மாயாப் பிரதிபிம்பரான ஈசுவரன்-1, பிரஹ்மம் - 1 ஆக இத்த

எட்டுஞ் சகலப் பிராணிகளாலும் சமுதாயமா (பொதுவா) க வநுபவிக்கப்படும். ஏனைய விருபத்தெட்டும் அந்தந்தப் பிராணிகளால் பிரதக்கா (வெவ்வேறு) க ஆ நு ப விக்கப்படும். அஃதெங்ஙனெனின்:—பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் யாவருக்கும் ஆகாரமில்லை; மழை மறுக்கில் யாவருக்குஞ் சலமில்லை; தேயுவில்லாதிருந்தால் பாகம் (உணவுப் பொருள்கள் உண்ணுதற்குப் பக்குவமாதல்) இல்லை; வாயுவியக்க மில்லாவிட்டால் வாடை (வாடைக்காற்று) தென்றல் (தென்றற்காற்று) இல்லை; ஆகாச மிறக்கில் ஒருவருக்கும் அவகாச (இட) மில்லை; மாயையும் மாயாப் பிரதிபிம்பரு மிறக்கிற் சகல சமயத்திற்குந்தெய்வமில்லை; பிரஹ்ம மில்லையாயின் ஒருவருக்கு மறிவில்லை. ஆகையால் இந்தஎட்டும் எல்லாருக்குஞ் சமுதாயமாம். பிரதக்கெங்ஙனெனின் (தனித்தனியா யநுபவித்தற் குரியவை யென்பது எப்படி யென்றால்):—ஒருவனுக்கு ஸ்தூலசரீர மிறக்கில் யாவருக்கும் ஸ்தூலசரீரம் இறவாதபடியினாலும், சூட்சும சரீரத்தி லொருவனுக்கு அங்கவைகல்லியம் (உறுப்புக் குறைவு) வந்தால் யாவருக்கும் வாராதபடியினாலும், முத்தரா யிருக்கின்ற சுகர்வாமதேவர் முதலானோருக்கு அவித்தையும் ஜீவனு மிறந்து போயிருக்க மற்றையோருக்கெல்லாம் அவித்தையும் ஜீவனு மிறவாத படியினு

னும் இந்த விருபத்தெட்டுத் தத்துவமும் ஒவ்வொருவனுக்கும் பிரதக் கென்பதிற் சந்தேகமேயில்லை.

ஈசுவரன்.

24.—(கு-ரை). மாயாப் பிரதிபிம்பனுயுள்ள ஈசுவரன் ஒருவனேயா யிருந்தும் அவ்வீசுவரனைச் சமயவான்கள் உண்மையுணராது கால தேச நிமித்தங்களுக் கேற்றவாறு வேறுவேறுருவமும் வேறுவேறு நாமமும் கற்பித்துக்கொண்டு வணங்குதல்பற்றி 'மாயையும் மாயாப்பிர திபிம்பரு மிறக்கில் சகல சமய(மத)த் திற்கும் தெய்வமில்லை' என்று கூறப்பட்டது. "உலகெலாம் சமயங்க ளொவ்வாத சாத்திரமாம், சவலைக் கடலுளனாய்க்கிடந்து தடுமாறும், கவலைக்கெடுத்து" என்று மாணிக்கவாசக சுவாமிகள் அருளியதிங் கறியத்தக்கதாம்.

பிரஹ்மம்.

அறிவாகாரமா யிருத்தல் யாதென்று விசாரிக்குமிடத்து தேகம், இந்திரியம், அந்தக்கரணம், பிராணன், ஜீவன் யாவும் உண்மையில் அறிவாகாரமாயிருத்த லின்றென்பது பெறப்பட்டுப் பிரஹ்மமே அறிவாகாரமா யிருப்பதென் றேற்படுகின்றமையின் 'பிரஹ்மமில்லையாயின் ஒருவருக்கு மறிவில்லை' என்று கூறப்பட்டது.

"சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வான்" என்று பிரமகீதை கூறுவதிங் கறியத்தக்கது.

அங்கவைகல்யம்.

குருடாதல், செவிடாதல், ஊமையாதல் முதலியன அங்கவைகல்யமாம்.

## சுகர் வாமதேவர்.

சுகர் வாமதேவரென்பார் வேதப் பிரதிபாதகராயுள்ள தத்துவ ஞானிகள். வாராகோபநிஷத்து நான்காவ தத்தியாயத்தில்''சுகர் முத்தர், வாமதேவர் முத்தர்;அவர்களைத் தவிர முத்தியடைந்தவர்களில்லை. (இவ்விருவருடைய மார்க்கத்தைத் தவிர முத்திக்கு வேறே மார்க்கமில்லையென்பது தாற்பரியம்). இந்த லோகத்தில் சுகமார்க்கத்தை யெந்தத் தைரியசாலிகளனுசரிக்கின்றார்களோ அவர்கள் சத்தியோ (இந்தத்தேகம் போனவுடனே) முத்த ராகின்றார்கள். இந்த லோகத்தில் வாமதேவ மார்க்கத்தை யெப்போது மனுசரிக்கின்றவர்கள் மீண்டு மீண்டும் பிறப்பை யடைந்து சத்துவ குணத்தோடு கூடியயோக மார்க்கங்களினாலேயும் சாங்கிய (ஞான) ங்களினாலேயும் கருமங்களினாலேயும் கிரம முத்தர்களாகின்றார்கள். சுகமார்க்கம் வாமதேவமார்க்கம் என்று ரண்டு மார்க்கங்கள் தேவனாலேற்படுத்தப்பட்டன. சுகமார்க்கமானது பட்சிமார்க்கம் (குறித்தவிடத்திற்குப் பட்சிகள் பறந்து போவதுபோல் இந்தத்தேகம் போனவுடனேமுத்தியடைவது) என்றும், வாமதேவ மார்க்கமானது எறும்பு மார்க்கம் (குறித்த விடத்திற்கு எறும்பு போகவேண்டுமானால் கிரமக்கிரமமாய் ஊர்ந்துபோவதுபோல் இந்தத்தேகத்தை விட்டுப் பிறகு இதைவிட வுத்தமமான ஜன்மமடைந்து அதிலிருந்து பின்னும் உத்தமமான ஜன்மமடைந்து இப்படியே பலஜன்மங்களையடைந்துமுடிவில் பிரஹ்மலோகஞ்சென்று பிரம்மாவுடன் முத்தியடைவது) என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. விதிவாக்கியங்களினாலாவது நிஷேத வாக்கியங்களினாலாவது மகாவாக்கிய விசாரத்தினாலாவது சாங்கியயோக சமாதியினாலாவது அசம்பிரஞ்ஞா சமாதியினாலாவது தமது ஆத்மசொரூபத்தை யறிந்து நிர்மல

மானவர்கள் சுகமார்க்கத்தினாலே பரமபதத்தை (மோட்சத்தை) அடைகிறார்கள். இயமமுதலிய ஆசனங்களினாலே யுண்டாகின்ற ஆயாசமாகிய அடாப்பியாசத்தினாலே (அடயோக அப்பியாசத்தினாலே) அடிக்கடி அநேகதடைகளினா லுண்டான அணிமாதி (சித்தி) களுக் குட்பட்டவனாய் நல்லபயனை யடையாமல் மீண்டும் நல்லகுலத்திற் பிறந்து, (முந்திய) ஜன்மத்தின் வாசனையினாலே மீண்டும் யோகாப்பியாசம் செய்து, அநேக ஜன்ம அப்பியாசத்தினாலே வாமதேவ மார்க்கத்தினாலே அந்த † விஷ்ணுவினுடைய பரமபதமாகிய முத்தியை யடைகின்றான். பிரஹ்மப் பிராப்தியைக் கொடுக்கத் தக்கதாகவும் மங்களகரமானதாகவும் இந்தவிரண்டு மார்க்கங்க ளிருக்கின்றன. இவற்று ளொன்று சத்தியோ முத்தியையும் மற்றொன்று கிரமமுத்தியையும் கொடுக்கத்தக்கன" என்று கூறுவதிங்கு நன்கு கவனிக்கத் தக்கதாம்.

அ - கை.

## முப்பத்தாறுந் தத்துவம் ஆத்மவடிவ சிவம் என்பதை விளங்கக் கூறல்.

25.—இந்தத் தத்துவம் முப்பத்தாறனுள், எப்போதுந் தானாகவே காணப்படுகிற தத்துவம்-1, எப்போதுந்

---

† உத்தம வுபாசகர்கள் விதேகமுத்தியடைதற் கதிகாரிகளாயிருத்தலின் மரணமடைந்த பின்னர்த்தேவயான (அர்ச்சி) மார்க்கமாக அவர்களியாவரும் பிரஹ்மலோகத்திற்கே போகின்றார்கள். அப்பிரஹ்மலோகம் விஷ்ணுவுபாசகனுக்கு வைகுண்டமாகவும், சிவோபாசகனுக்குச் சிவலோகமாகவும் பிரதீதியா (தோன்று) கின்றதென்பது சாஸ்திரத்தினிரகசியார்த்தமாம்.

தனக்கு அன்னியமாகவே காணப்படுகிற தத்துவம் 7; தானாகவும் தனக்கு அன்னியமாகவும் அநுபவிக்கப்படுகிற தத்துவம் - 28. அவை தெங்ஙனெனின்:— அவஸ்தாத்திரய சாட்சியா யிருக்கின்ற பிரஹ்மசைதன்னியம் எல்லாவவஸ்தைகளிலும் தானாகவே விளங்குகையினாலும் மற்றத் தத்துவங்கள்போலத்தனக்கு அந்நியமாக விளங்காமையினாலும் பிரஹ்மசைதன்யமொன்றுமே தானாக விருக்கின்றது. பஞ்ச பூதம், மாயை, மாயாப்பிரதிபிம்பமென்னுமிவ்வேழின்றொழிலான வெட்டு, குத்து, உழவு, (ஈசுவரனுடைய கிருத்தியமான) பஞ்சகிருத்தியம், தசாவதாரமுதலானவையொருகாலுந் தன்னுடைய தொழில்களாகக் காணப்படாமையின் இந்த ஏழு தத்துவமுந் தனக்கு அன்னியமேயல்லாமல் தானாகமாட்டா. மற்றஇருபத்தெட்டுத்தத்துவங்களுள், நான்பிராமணன், நான் க்ஷத்திரியன், நான்வைசியன், நான் சூத்திரன், நான் பிரஹ்மசாரி, (ஆசிரியனிடத்தோதி விரதங்காத்து விவாகமின்றியிருப்பவன்), நான்கிருகஸ்தன் (இல்லறத்திவ்வழுவாது மனையாளோடுகூடிவாழ்பவன்), நான்வானப் பிரஸ்தன் (இல்லறத்தை விட்டு மனையாளோடாயினும் தனித்தாயினும் வனத்திற் சென்று தவஞ்செய்பவன்), நான் சந்நியாசி (முற்றத் துறந்தவன்), நான் ஆண், நான் பெண், நான் கரியன், நான் சிகப்பன், நான் கட்டையன், நான் நெட்டையன், நான்

பருத்தேன், நான் இளைத்தேனென்று தானாகவழங்குகின்ற ஸ்தூலசரீரமாகிய ஆறுதத்துவமும்:மற்றொருவேளையிலே தனக்குப் புறம்பு (வேறு) பட்டு என்மாடு என்கன்றென்றாற்போல என்சரீரம் பருத்தது, என்சரீரம் இளைத்தது, என் மயிர் நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாள் ஆயிற்றென்று தான் வேறு ஸ்தூலசரீரம் வேறாகவழங்குகின்றபடியினாலும், நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன், போகித்தேன், கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்திற்கு (கருப்பிற்கு) ஜீவித்தேனென்று தானாக வழங்குகின்ற சூட்சுமசரீர தத்துவம் இருபதும்:-மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு என் வீடு என்னுடைமையென்றாற்போல என்கண் என்காது என்மூக்கு என்னாக்கு என்கை என்கால் என்மனம் என்புத்தி என்னகங்காரம் என்சித்தம் என்பிராணனென்று தான்வேறு அவை வேறாக வழங்குகின்றபடியினாலும், நானறியே னறிவே னென்று தானாக வழங்குகின்ற வஞ்ஞானமுஞ் சிதாபாசனும்: மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு என்னஞ்ஞானம் என்ஜீவனென்று வழங்குகின்றபடியினாலும் இந்த இருபத்தெட்டுத் தத்துவமுந் தானாகவுந் தனக் கன்னியமாகவும் வழங்கப்படுதல் சித்தம்.

இப்படிச்சொன்ன குருவைப் பார்த்துச் சிஷ்யன் கேட்கும்படி (விநயபூர்வகமாய்க் கேட்பதாவது:— சுவாமி!) இந்த இருபத்தெட்டுத் தத்துவமுந் தானுந் தானுஞ் சாட்சியைப்போல ஒருதன்மையாகத் தோற்ற வேண்டுமே யல்லாமற் பஞ்சபூதத்தைப் போலத் தனக் கன்னியமாகக் காணக் கணக்கி(காரணமி)ல்லை. இந்த இருபத்தெட்டுந் தனக்கன்னியமேயானாலெப் போதும் புறம்புபட்டே யிருக்கவேண்டு மல்லாமல் தானாக வழங்கக்கணக்கில்லை. அவை தானுமாய்த் தனக்கு அன்னியமுமா யிருக்குமென்பது இருட்டாதித்த (இருட்டுவடிவ சூரிய) னென்றாற் போல் விருத்தமா மென்கிற சங்கைக்கு (ஆட்சேபத்திற்கு)க் குருசொல்லுகிறார்:— பரமார்த் தமா (உண்மையா)கத் தானென்கிற தொருவகையும் அத்தியாசத்தி (மயக்கத்தி)னாலே தானென்கின்ற தொரு வகையும் ஆக இருவகையுமுண்டு. சாட்சி சைதன்னியத்தைத் தானென்கின்றது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக் கன்னிய மாயிருக்கின்ற இந்தவிருபத் தெட்டையுந் தானென் கின்றது கட்டையைக் கள்ள னென்றாற்போலவும் பழுதையைப் பாம்பென்றாற் போலவும், புத்திர தாராதிகளை(பிள்ளை பெண்சாதி முதலானவர்களை)த் தானென்றாற் போலவும் மயக்கமே யல்லாமல் உண்மை யல்ல; ஆகையினால் அஞ்ஞான காலந்

தொடங்கித் தானல்லவென்று காணப்பட்ட தத்துவம் ஏழு, இப்போது இப்படிப்பட்ட விவேகம் பண்ணினபிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவம் 28 ஆக இந்த முப்பத்தைந்து தத்துவங்களையும் அதததற்குச் சொன்ன குணங் குறிக (சிறப்பியல்லென்னு மடையாளங்க) ளோடேகூடக் காண்கின்ற அறிவு கடத்தைப் பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவே இருந்து கடத்தைப் பார்க்கின்றது போல இந்த முப்பத்தைந்து தத்துவத்தையுங் காண்கின்ற முப்பத்தாறாந் தத்துவமாகிய பேரறிவென்றுணர்ந்து அது தானென்றறிந்து (தனதெதார்த்த வடிவமென் றுள்ளவாறு நிர்விகற்ப சமாதிவாயிலாக வறிந்து) அதுதானே பிரஹ்மமென்று தெளிந்தவனே‡பிரஹ்மதரிசனமுடைய ஜீவன்முக்தனென்று சொல்லப்படும்.

## பஞ்சகிருத்தியம்.

25.—(சூ-ரை). சிருஷ்டி (படைப்பு), திதி (காத்தல்), சங்காரம் (அழித்தல்), திரோபவம் (மறைத்தல்), அனுக்கிரகம்

‡ பிரஹ்மதரிசனம்--பிரஹ்மத்தைத் தனது நிஜசொரூபமாகக்காண்டல். "சிவன்வேறு சீவன் வே றென்றிரண்டாச் செப்பு, மவன் சிவனை யென்று மறியான்", "சீவ பரமிரண்டுந் தேருமிடத் தேகம்" என்று சிவஞான வள்ளலார் கூறுவதிங் கறியத்தக்கதாம்.

(அருளுதல்) என்னு மிவ்வைந்து தொழில்களும் பஞ்சகிருத்திய மெனப்படும். இவ்வைந்தனுள், முன்னுள்ள மூன்றும் ஜடத்திற்கும், பின்னுள்ள விரண்டும் சித்திற்கு முரியனவாம்.

## தசாவதாரம்.

துஷ்டரையொழித்துச் சிஷ்டரைக் காக்குமாறு காலதேச நிமித்தங்களுக்கேற்ற வாறு ஈசுவரன் கொள்ளும் வடிவத்திற்கு அவதாரமென்று பெயராம். மச்சம் (மீன்), கூர்மம் (ஆமை), வராகம் (பன்றி), நரசிங்கம் (மனிதவுருவும் சிங்கவுருவுங் கலந்த வடிவம்), வாமனம் (குறுகிய மனிதவடிவம்), பரசுராமன், இரகுராமன், பலராமன், கண்ணன், கற்கி (குதிரைமுக முடைய மனிதவடிவம்) என்பன தசாவதாரமா (பத்துப் பிறப்பா)ம். இவ்வவதாரமே யன்றி நரநாராயணன், கபிலன், வியாதன், பௌத்தன் என்றற் றொடக்கத் தவதாரங்களு முண்டு. [கர்மத்தினாலன்றி யிச்சையினாற் கொள்ளும் வடிவம் அவதாரமெனப்படும்].

## ஸ்தூலசரீர தர்மம்.

பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்னும்ஜாதியும்; பிரஹ்மசரியம், கிருகஸ்தம். வானப்பிரஸ்தம் சந்நியாசம் என்னும் ஆசிரமமு (நிலையு)ம்; ஆண்பெண்ணென்னும் அங்கமு (உறுப்பு) ம்; செவலை, கட்டை, நெட்டை என்னும் குணமும்; பருத்தல், இளைத்தல் என்னும் விகாரமும் ஸ்தூல சரீரத்தின் தர்மங்களாம். இத்தர்மங்கள் அத்தியாசத்தி (பிராந்தியி) னால் நான் பிராமணன் என்றற் றொடக்கத்தனவாக ஆத்மாவினிடத்துத் தோன்றுகின்றன. பிராமணசாதி முதலியனவே ஆத்மா வாகுமாயின் என்சாதி, என் சரீரம்இளைத்தது என்றற் றொடக்கத்தனவாக வழங்குதல்கூடாது; உடைமையும் உடையதும் ஒன்றாயிருத்தல் கூடாமையின்.

### சூட்சுமசரீரதர்மம்.

காண்டல் (கண்ணிந்திரியத்தின் வியாபாரம்), கேட்டல் (செவியிந்திரியத்தின் வியாபாரம்), தொடல் (பரிச விந்திரியத்தின் வியாபாரம்), போகித்தல் (உபஸ்தவிந்திரியத்தின் வியாபாரம்), கொடுத்தல் வாங்கல் (பாணியிந்திரியத்தின் வியாபாரம்), நடத்தல் (பாதவிந்திரியத்தின் வியாபாரம்), புசித்தல் (வாக்கிந்திரியத்தின் வியாபாரம்), சிந்தித்தல் (சித்தத்தின் வியாபாரம்), நிச்சயித்தல் (புத்தியின் வியாபாரம்), ஜீவித்தல் (பிராணனின் வியாபாரம்) ஆகிய இவை சூட்சுமதேகத்தின் தர்மங்கள். இத்தர்மங்கள் அத்தியாசத்தினால் நான்கண்டேன் நான் கேட்டேன் என்றற் றொடக்கத்தனவாக ஆத்மாவினிடத்திற் றோன்றுகின்றன.

### காரணதேக தர்மம்.

அறியாமை காரணதேகத்தின் தர்மம்; இஃது அத்தியாசத்தினால் நான்அறியேனென்று ஆத்மாவி னிடத்திற்றோன்றுகின்றது.

### ஜீவ தர்மம்.

அறிதல் ஜீவனின் தர்மம்; இஃது அத்தியாசத்தினால் நான் அறிந்தேன், அறிகின்றேன், அறிவேனென்று ஆத்மாவினிடத்திற் றோன்றுகின்றது.

ஸ்தூலசரீரமும் அதன்தர்மமும், சூக்குமசரீரமும் அதன் தர்மமும், அஞ்ஞானமும் அதன் தர்மமும், ஜீவனும் அதன் தர்மமும் ஆத்மாவல்ல. ஸ்தூலசரீர தத்துவம் 6, சூட்சுமசரீர தத்துவம் 20, அஞ்ஞானம் 1, ஜீவன் 1 ஆக இவ்விருபத்தெட்டுத் தத்துவங்களும் ஆத்மாவிற்கு வேறுபட்டவை

யென்று இங்கு விசாரமுகத்தாற் றீர்மானிக்கப்பட்டது. இது பற்றி விரிவாய் வாசுதேவமனனம் பஞ்சகோச விலக்ஷண நிரூபணத்திற் கண்டு கொள்க.

## அத்தியாசம்.

பிராந்தி (மயக்க) ஞானத்திற்கு விஷயமாகிய மித்தியா வஸ்துவிற்கும் (கயிற்றிற் றோன்றிய பாம்பிற்கும்) (அதனது) பிராந்தி ஞானத்திற்கும் அத்தியாசமென்று பெயராம். இவ்வத்தியாசம் அர்த்தாத்தியாசம் ஞானாத்தியாசமென விரண்டு வகைப்படும். [கயிற்றிற் றோன்றிய பாம்பு அர்த்தாத்தியாசமாம்; அதன் ஞானம் ஞானாத்தியாசமாம்]. இவ்விரண்டனுள் அர்த்தாத்தியாசம்: (1) கேவல சம்பந்தாத்தியாசம், (2) சம்பந்த சகித சம்பந்தியத்தியாசம், (3) கேவல தர்மாத்தியாசம், (4) தர்மசகித தர்மியத்தியாசம், (5) அன்னியோன்னியாத்தியாசம், (6) அன்னியதராத்தியாசம் என் றறுவகையாம்.

### (1) கேவல சம்பந்தாத்தியாசம்.

வெள்ளியில் கிளிஞ்சலின் தாதாத்மிய சம்பந்தாத்தியாசமுண்டாவது போன்று அநான்மாவி (ஜடத்தி) ல் ஆன்மாவின் அத்தியாச முண்டாகின்றது. ஆண்டு அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்த மாகாது அதனது தாதான்மிய (ஒற்றுமைவடிவ) சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆகவே, அநான்மாவில் ஆன்மாவின் சம்பந்தம் கேவல சம்பந்தாத்தியாசமாம்: [அநாத்மாவில் ஆத்மாவின் சம்பந்த மிருப்பதாகத் தோன்றுதல் மயக்கத்தினாலாவதன்றி யுண்மையி லின்றென்பது கருத்து]. வானவளைவில் வானத்தின் சம்பந்தமிருக்கின்ற தென்பது மிதற் குதாரணமாம்.

## (2) சம்பந்த சகித சம்பந்தியத்தியாசம்.

கயிற்றினிடத்து (அதிற்றோன்றிய) பாம்பின் சம்பந்தமும அதன் (பாம்பின்) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாதல் (கற்பனையாயிருத்தல்) போன்று ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்தமும் (அதன்) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியாசமாகின்றன. ஆதலால் ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்த சகித (கூடிய) சம்பந்தியி னத்தியாச முண்டாகின்றது. சம்பந்தத்தை யுடையது சம்பந்தியாம்.

## (3) கேவல தர்மாத்தியாசம்.

நான் வெளுத்தேன் நானிளைத்தேன் என்றவிடத்து ஸ்தூல தேகத்தின் வெண்மை முதலியனவும், நான்பார்த்தேன் நான்கேட்டேன் என்றவிடத்துச் சூட்சும தேகத்தின் பார்வைமுதலியனவுமாகிய தர்மங்கள் ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்றன; அத்தேகங்களின் சொரூபம் அத்தியஸ்த மாகின்றதில்லை. ஆதலால் ஆத்மாவில் ஸ்தூல சூக்கும தேகங்களின் கேவலதர்மத்தி னத்தியாச முண்டாகின்றது. வேறொன்றனை யாசிரயித்ததாய் (பற்றுக் கோடாக வுடையதாய்) ச் சுதந்தரமின்றி யிருப்பது தர்மமெனப்படும். வெண்மை, இளைத்தல், பார்த்தல், கேட்டல் முதலியவைகள் தர்மங்களாம்.

## (4) தர்மசகித தர்மியத்தியாசம்.

நான் கர்த்தா நான் போக்தா என்றவிடத்துக் கர்த்திருத்துவமும் (கர்த்தாவாந் தன்மையும்), போக்திருத்துவமும் (போகத்தை யனுபவிக்குந் தன்மையும்) ஆத்மாவின் தர்மமாயிராது அந்தக்கரணத்தின் தர்மமா யிருக்கின்றன. ஆத்மா நிர்விகாரமா யிருத்தலால் அதன்கண் யாதொரு விகாரமு மின்

ரும். ஆயினும், அந்தக்கரணத்தின் கர்த்திருத்துவாதி தர்மங்க ளும் (அதன்) சொரூபமுமாகிய இரண்டும் ஆத்மாவில் (கிளிஞ் சலில் வெள்ளித்தன்மைத் தர்மமும் அதன் சொரூபமும் கற்பனையா யிருத்தல் போன்று) அத்தியஸ்தமா யிருக்கின் றன. ஆதலால் ஆத்மாவில் அந்தக்கரணத்தின் தர்மசகித தர்மியின் அத்தியாச முண்டாகின்றது. தர்மத்தையுடை யது தர்மியெனப்படும்.

## (5) அன்னியோன்னியாத்தியாசம்.

காய்ச்சிய இரும்பில் இரும்பின் தன்மை அக்கினியிலும் அக்கினியின் தன்மை இரும்பிலும் இருத்தல்போன்று ஆத் மாவில் அநாத்மாவின் அத்தியாசமும் அநாத்மாவில் ஆத்மா வின் அத்தியாசமும் இருத்தல் அன்னியோன்னியாத்தியாச மாம். ஒன்றற்கொன்று அத்தியாசமாதல் அன்னியோன்னியாத் தியாசத்தின் தன்மையாம்.

(1) சத்து, (2) சித்து, (3) ஆநந்தம், (4) அத்வைதத்து வம் (இரண்டென்னுந்தன்மையின்மை)என்னும் நான்கு விசே டணங்களும் ஆத்மாவிற் குரியனவாம். (1) அசத்து, (2) ஜடம், (3) துக்கம், (4) துவைதசகிதத்துவம் (இரண்டோடு கூடியிருக்குந்தன்மை) என்னுமிந்நான்கு விசேடணங்களும் அநான்மாவிற் குரியனவாம். இவற்றுள் அநான்மாவின் துக்கம் துவைதசகிதத்துவம் என்னு மிவ்விரண்டு விசேடணங்களும் ஆத்மாவின் ஆநந்தத்தையும் அத்துவைதத்துவத்தையும்மறைக் கின்றன. அம்மறைத்தலினால் ஆத்மாவில் 'நான் ஆநந்தரூபனு யும் அத்வைத ரூபனுயு மிருக்கிறேன்' என்னும் ஞானமுண் டாகாது "நான் துக்கியாயும் ஈசுவராதிகளிலும் வேறானவனுயு மிருக்கிறேன்" என்னும் ஞான முண்டாகிறது. ஆத்துமா

யின் சத்து சித்து என்னு மிவ்விரண்டு விசேடணங்களும் அநான்மாவின் அசத்துவத்தையும் ஜடத்துவத்தையும் மறைக்கின்றன. அதனால் அநான்மாவாகிய அகங்காராதிகளில் இஃது "அசத்தாயும் சடமாயுமிருக்கிறது" என்னும் ஞானமுண்டாகாது "இருக்கிறது விளங்குகிறது" என்னும் ஞானமுண்டாகின்றது. இவ்வாறு ஆன்மா னான்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) அத்தியாச மிருக்கின்றமை காண்க.

இருத்தலென்பது சத்து; விளங்குதலென்பது சித்து.

## (6) அன்னியதராத்தியாசம்.

இரண்டில் ஒன்றனது அத்தியாசம் அன்னியதராத்தியாசமாம். (அன்னியதரம்—இரண்டிலொன்று). அரவில் கயிற்றின் சொரூபம் அத்தியஸ்தமாகாது கயிற்றில் அரவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் போன்று அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது ஆன்மாவில் அநான்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் அன்னியதராத்தியாசமாம்.

இங்குக் கூறிய ஆறுவகை யத்தியாசமும் கீழ்க்கூறப்படும் இருவகை யத்தியாசத்து ளடங்கும்.

அவை (1) சொரூபாத்தியாசம் (2) சம்சர்க்காத்தியாசமென்பனவாம்.

## 1. சொரூபாத்தியாசம்.

தத்துவ ஞானத்தினால் பொய்யென்று நிச்சயிக்கத்தக்க வஸ்து (பாம்பு) அதிஷ்டானத்தில் (கயிற்றில்) சொரூபமாக அத்தியஸ்தமாயிருக்கிறது. தேகாதிப் பிரபஞ்ச அநான்மாவிற்கு அதிஷ்டான (ஆன்ம) ஞானத்தினால் பாதம் (பொய்

யென்று நிச்சயித்தல்) உண்டாதலால் ஆன்மாவில் அதன் சொரூபாத்தியாச முண்டாகின்றது. ஒன்றன் முழுவடிவமும் மற்றொன்றில் அத்தியஸ்தமாதல் சொரூபாத்தியாசமாம்.

## 2. சம்சர்க்காத்தியாசம்.

பாதிக்க (பொய்யென்று நிச்சயிக்க)த் தகாத வஸ்துவின் சொரூபம் அத்தியஸ்தமாவதின்று. ஆனால் அதன் சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆதலால் அநான்மாவில் ஆன்மாவின் சம்சர்க்காத்தியாச முண்டாகின்றது. ஆகவே இது சம்சர்க்காத்தியாசமாம். சம்சர்க்கம்—சம்பந்தம்.

(1) கேவலதர்மாத்தியாசம், (2) தர்மசகிததர்மியினத்தியாசம், (3) அந்நியதராத்தியாசமென்னு மிம்மூன்றும் சொரூபாத்தியாசத்தி லந்தர்க்கதமாம். (4) கேவலசம்பந்தாத்தியாசம் சம்சர்க்காத்தியாசமேயாம். (5)சம்பந்தசகிதசம்பந்தியத்தியாசம் சம்சர்க்காத்தியாச சகிதசொரூபாத்தியாசமாம். (6) அந்நியோந்நியாத்தியாசத்தில் சம்சர்க்காத்தியாசம், சொரூபாத்தியாச மென்னுமிரண்டுமுளவாம். ஏனெனின், ஆத்மாவின் சொரூபம் சத்தியமாதலின் (பாதிக்கத்தக்கதன்றாகலின்) அஃதத்தியஸ்தமாவதின்று. ஆனால் அதன் தாதாத்மிய சம்பந்தம் அநாத்மாவில் அத்தியஸ்தமாம். ஆகையால் அதன் சம்சர்க்காத்தியாசமுண்டாகின்றது. அநாத்மாவின் சொரூபம் மித்தையாகையால் அஃதாத்மாவில் அத்தியஸ்தமாகின்றது. ஆதலால் அதன் சொரூபாத்தியாசமுண்டாகின்றது. இவற்றை யூகித்துணர்க.

† அத்தியாசத்தின்றன்மை யறியுமாறு இங்குச் சுருக்கமாகக் கூறப்பட்டது. விரிவா யறிய விருப்புடையோர் விருத்திப்பிரபாகரம் ஏழாவது பிரகாசத்திற் கண்டுகொள்க.

---

† தனது பிரகாசத்திற்கும் மற்றவற்றின் பிரகாசத்திற்கும் தானே காரணமாயுள்ள தீபம்போல், தனதத்தியாசத்திற்கும் மற்றையவற்றி னத்தியாசத்திற்குந் தானே காரணமாயுள்ளது மாயையாம். அவித்தை, அநிர்வாச்சியம், அநிர்தம், தத்துவ ஞான நிவிர்த்தியம், அஞ்ஞானமென்றற் றொடக்கத்தன வாகக் கூறப்படும் இஃது (ஆகாயத்தில் வளைவுபோல) ஆத்மாவில் அநாதி யத்தியாசமாம். இதனோடு கூடிய ஆத்மாவில் அகங்காராத்தியாசமும், இதனோடு கூடிய ஆத்மாவில் காமசங்கற்பமுதலிய அகங்கார தர்மங்களின் அத்தியாசமும் குருட்டுத்தன்மை செவிட்டுத்தன்மை நபுஞ்சகத்தன்மை முதலிய விந்திரிய தர்மங்களின் அத்தியாச மாகிய விவையு முண்டாகின்றன. செவியாதி இந்திரியங்கள் பரோட்சமாதலின் அவற்றிற்கு ஆத்மாவில் அபரோட்ச தர்மி யத்தியாசம் சம்பவியாததலின், (நான்குருடன் நான்செவிடன் என்றற் றொடக்கத்தனவாக) அவற்றின் தர்மாத்தியாசத்தோடு கூடிய ஆத்மாவில் நான்மனிதன் நான்புருஷன் என்றற்றொடக்கத்து ஸ்தூல தேகாத்தியாசம் மனிதத்தன்மை முதலிய தர்மங்களுடன் கூடியே யுண்டாகின்றது; கேவலம் நான்தேகமென்று தருமி சொரூபமாக அத்தியாச முண்டாவதில்லை; அவ்வாறு ஞானமுண்டாகாமையின். அதனோடு கூடிய ஆத்மாவில் ஸ்தூலத்தன்மை முதலிய தர்மங்களி னத்தியாசமும், அதனோடு கூடிய ஆத்மாவில் பாஹியமாயுள்ள மனைவிமக்கள் முதலியோ

அது தானேன்றறிதல் ஜீவன்முத்தி.

"ஓ சுவேதகேதுவே! இந்த ஸகலப் பிரபஞ்சமும் அந்த சத்தையே ஆதாரமாக வுடையது. அதுதான் சத்திய மானது, அதுதான் ஆத்மா, அது ‡ நீயாயிருக்கிறாய்(தத்துவமசி)''என்று சாந்தோக்கியோபநிஷத்தும், "சர்வசுவரூபியாயும்

---

ரது சாகல்ய (நிறைவு) வைகல்ய (குறைவு) முதலிய தர்மங்களின் அத்தியாசமு முண்டாகின்றன.

இங்ஙனம் ஆத்மாவிற்குத் தன்னிடத்துள்ள அநாதி அஞ்ஞானத்தியாசத்தினால் அகங்காரமுதல் ஸ்தூலதேக பரியந்தமான அத்தியாசஞ் சம்பவிக்கின்றதென்க. ஒன்றிற் பிறிதொன்றன் தோற்றம் அத்தியாசமா மென்பது காரணாத்தியாசம் காரியாத்தியாச மென்னுமிரண்டற்கும் பொதுவிலக்கணமாம். அல்லது சத்திய வஸ்துவும் மித்தியா வஸ்துவும் சேர்ந்து தோன்றுவது அத்தியாசமா மெனினு மொக்கும். (எதிரேயுள்ள) கயிற்றின்கண் இதுபாம்பென் றத்தியாசமுண்டாகுமிடத்து இதுவென்பது சத்திய வஸ்துவும் பாம்பென்பது மித்தியா வஸ்துவுமாம்.

‡ (1) பிரஞ்ஞானம் (நித்தியசுத்தபூரணஞானமே) பிரஹ்மம், (2) அகம் பிரஹ்மாஸ்மி, (நான் பிரஹ்மமாயிருக்கிறேன்), (3) தத்துவமசி, (4) அயமாத்மா (இவ்வாத்மாவே) பிரஹ்மம் என்னும் மகாவாக்கியம் நான்கனுள் முதலாவது அப்பியாச வாக்கியமும், இரண்டாவது அநுபூதி வாக்கியமும், மூன்றாவது உபதேச வாக்கியமும், நான்காவது சம்மத வாக்கியமுமாம். தத்துவமசி யென்பது உபதேச வாக்கியமாயிருத்தலின் இதன் பொருள் செவ்விதாக வறியத்தக்கதாம். தத்பதத்தின் வாச்

இந்தப் பிரபஞ்சத்திற்கு முக்கிய இருப்பிடமாயும் சூட்சுமத்தி லும் அதிசூட்சுமமாயும் நித்தியமாயுமிருக்கின்ற பரப்பிரஹ்ம மெதுவோ அது நீ; நீயே அது. ஜாக்கிர சொப்பன சுழுத்தி

சியார்த்தம் ஈசுரனும் இலட்சியார்த்தம் சுத்தப்பிரஹ்மமுமாம்; துவம்பதத்தின் வாச்சியார்த்தம் ஜீவனும் இலட்சியார்த்தம் கூடஸ்தனுமாம்; அஸியென்பதன் பொருள் ஐக்கியமாம். ஈசுர னும் ஜீவனும்(மாயா அவித்தியாயுபாதியால்) மேகாகாசம்போ லும் கடஜலப்பிரதிபிம்பாகாசம்போலுமிருத்தலின் அவ்விருவ ர்க்கும் ஐக்கியம் சம்பவியாது. பிரஹ்மமும் கூடஸ்தனும் மகா காசம்போலும் கடாகாசம்போலு மிருத்தலின் அவ்விருசேதன ங்கட்கும் ஐக்கியம் சம்பவிக்கும். சத்திவிருத்தியினு லறியப்ப டும் பொருள் வாச்சியார்த்தமாம். இலட்சணு விர்த்தியினாலறிய ப்படும்பொருள் இலட்சியார்த்தமாம். சப்தசத்தி (சொல்லி) ற்கு அர்த்தத்தோடுள்ள சாட்சாத்(நேர்)சம்பந்தம் சத்தி விருத்தியா ம். சத்திவிருத்தியாலறியப்படும் வாச்சியார்த்தத்தின்சம்பந்தம் இலட்சணுவிருத்தியாம். இது ஜகத் (விட்டது), அஜகத்(விடா தது), பாகத்தியாகம் (விட்டுவிடாதது) என மூவகைத்தாம். (1) வாச்சியார்த்த முற்றும்விட்டு அதன் சம்பந்தியைக் கிரகித் தல் விட்ட லட்சணையாம். அதற் குதாரணம் கங்கையி லிடைச் சேரி யிருக்கின்றது என்பதுபோலவாம். ஈண்டுக் கங்கை விடப்பட்டு அதன்கரை கொள்ளப் படுகின்றமை காண்க. (2)வாச்சியார்த்தத்தை விடாமல் அதன் சம்பந்தியைக் கிரகித் தல் விடாத லட்சணையாம். அதற்குதாரணம் வெள்ளையோடு கின்றது என்பதுபோலவாம். ஈண்டு வெண்ணிறத்தைவிடாது அதனை யுடைய பிராணியுங் கிரகிக்கப்படுதல் காண்க. (3) விரோதமுடைய ஏகதேச வாச்சியார்த்தத்தைவிட்டு அதன் சம்

முதலியவற்றில் எந்தப் பிரபஞ்சம் விளங்கிக்கொண்டிருக்கிறதோ அது பிரஹ்மமே; அது நானே என்றறிந்தால் சகல பந்தத்தினின்றும் விடுபடுகிறான்" என்று கைவல்லியோப

பந்தமுடைய விரோதமில்லாத ஏகதேச வாச்சியார்த்தத்தைக் கிரகித்தல்விட்டுவிடாதலட்சணையாம். இதற்குதாரணம்அவனே இவன் என்பதுபோலவாம். ஈண்டுக் காலம் தேசம் வேஷமுதலிய வற்றைவிட்டு அவற்றின் சம்பந்தமுடைய மனிதபிண்டம் கொள்ளப்படுகின்றமை காண்க. மேற்கூறிய மகாவாக்கியத்தில் விட்டுவிடாத விலக்கணையே சொல்லல்வேண்டும். ஆண்டுச் சர்வஞ்ஞத்துவ கிஞ்சிஞ்ஞத்துவாதி தர்மங்களோடு கூடிய மாயைஅவித்தைகளாகிய விரோத பாகம்விடப்பட்டுஅவற்றின் (கற்பித) சம்பந்த முடைய விரோதமில்லாத அசங்கசுத்த சேதனபாகம்கொள்ளப்படுதலால் பிரஹ்ம கூடஸ்தர்க்கு ஐக்கியம் பொருந்துகின்றதென்க. இவற்றின் விரிவை விசாரசாகரம் ஆறுவது தரங்கத்திற் காண்க. பிரஞ்ஞானம் பிரஹ்மம், அகம் பிரஹ்மாஸ்மி, அயமாத்மாப் பிரஹ்மம் என்னு மகாவாக்கியங்களுள், பிரஞ்ஞானம், அகம், ஆத்மா, என்னும்பதங்கட்கு வாச்சியார்த்தம் சீவனும், இலட்சியார்த்தம் கூடஸ்தனுமாம்; பிரஹ்ம பதங்கட்கு வாச்சியார்த்தம் ஈசுவரனும் இலட்சியார்த்தம் சுத்தப் பிரஹ்மமுமாம்.

"மாயையெனு முபாதியுறு மீசன்றனே மருவியதற் பதமுரைசெய்வாச்சியார்த்த, மாயதனதவித்தையுறுஞ்சீவன்றனே யறைகின்ற துவம்பதமோர் வாச்சியார்த்த, மேயமதா முபாதியெலா மிழந்தபின்ன ரேகவிலக்கணமான வத்துத்தானே, தூய பதமிரண்டிற்கு மிலட்சியார்த்தத் தொடர்புற்ற வைக்கியமே யசிபதார்த்தம்" என்று ரிபுகீதை கூறுவதறிக.

யேஷத்தும் கூறுவதால் முப்பத்தைந்து தத்துவங்களையும் சாட்சியாய் நின்றறிகின்ற முப்பத்தாறுந் தத்துவமாகிய அது(கூடஸ்தன்) தானென்றறிந்து, அதுதானே பிரஹ்மமென்று தெளிந்தவனே பிரஹ்மதரிசனமுடைய ஜீவன்முத்தன் என்பது நன்கு விளங்கும்.

அ - கை.

## பந்த மோட்சங்களின் காரணத்தைக் கூறல்.

26:—இப்படிப் பிரஹ்மமே தானென்றும், ஏனைய முப்பத்தைந்து தத்துவங்களுந் தனக் கன்னியமென்றும் பிரித்தறியாத அவிவேகி (ஆத்மா நாத்ம விவேகமில்லாத மூடன்) அகங்காரக்கிரந்தியினாலே புத்திர தாராதிகள் தவிக்கின்றதை யான் தவிக்கின்றேனென்னும் மூடத்தனம் போல இந்த இருபத்தெட்டினுடைய தொழிலையுந் தன்தொழிலென்று மயங்குகின்றபடியினால், இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட (சம்பாதிக்கப்பட்ட) புண்ணிய பாவங்களினாற்கட்டுப்பட்டு அந்தக்கன்மத்தின்படியே ஜனன மரணாதி சம்சாரத்திலே அடிபடுகிறேனென்று மயங்குவன். பிரஹ்மமைத்தன்னியமே தானென்றும் மற்ற முப்பத்தைந்துந் தானல்லவென்றுந் தெளிந்த விவேகியானவன் அகங்காரக் கிரந்தி யற்றபடியினால் இந்த இருபத்தெட்டினுடைய தொழிலையும் நான் செய்யவில்லை யென்றும் இந்த இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லையென்றுந் திடப்படத்தேறி மயக்கமற் றிருக்கின்ற படியினால் இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களி னின்றும் விடுபட்டுக் கன்ம

மில்லாதபடியினால் ஜனனமரணாதி சம்சாரமில்லாமல் முத்தனாகிப் பிரஹ்ம மாத்திரமாகவேயிருப்பன். இவனை ஜீவன்முத்தனென்றும், திடப்பிரஞ்ஞனென்றும், அதி வர்ணாச்சிரமி யென்றும், குணாதீதனென்றும், பகவத்பக்தனென்றும், பிராமணனென்றும் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. யாவரும் இந்தத் தத்துவத்தை விசாரம் பண்ணி மோக்ஷ மடையக் கடவர்.

## அகங்காரக்கிரந்தி.

26:—(சூ-ரை). தானல்லாத வுடம்பைத் தானெனக் கருதுதல் அகங்காரக்கிரந்தியாம். இதுவே, இருதயக்கிரந்தியாம். இது காரணமாகத் தன்னுடையதில்லாத பொருள் தனதென் றபிமானிக்கப்படுகின்றது. கிரந்தி-முடிச்சு (கட்டு). [அகங்காரக்கிரந்தி - அகங்காரத்தின் வசப்பட்டிருத்தலாம்]. கிரந்தி: இருதயக்கிரந்தி, சம்சயக்கிரந்தி, கர்மக்கிரந்தியென மூவகையாமெனக் கூறலுமுண்டு. (1) புத்தியை ஆத்மாவாக அத்தியாசத்தால் நிச்சயித்திருத்தல் இருதயக்கிரந்தி; (2) ஆத்மா ஏகமா? அநேகமா? சித்தா? ஜடமா?என்றற்றொடக்கத்தனவாக மபக்கங்கொண்டிருத்தல் சம்சயக்கிரந்தி; (3) சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமியமென்னும் கர்மங்களை ஆத்மா வுடைத்தாயிருக்கிற தென்றல் கர்மக்கிரந்தி.

## ஜீவன்முத்த வியல்பு.

"சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யி னிலவாய்வின் விழுது வீழ்ந்து,
பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையா வொன்றும்
பாரார், நன்றுதீ தென்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்"

என்று கைவல்லியநவநீதங் கூறுதலால் ஜீவன்முத்த னியல்பை யறிந்துகொள்க.

## திடப்பிரக்ஞன்.

"காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக் கண்ணொழிந் தொருபொரு ளில்லா, மாட்சியை யளிக்க வல்லவ" னாகிய குருவினது அனுக்கிரகத்தினால் சமாதி கூடி ஐயந்திரிபின்றி ஜீவப்பிரமங்களி னொருமையை யறிந்து யாதொன்றாலுங் கலங்காது அறிவாகாரமாயிருப்பவன் திடப்பிரஞ்ஞன். திடப்பிரஞ்ஞை - நிலைத்த அறிவு.

## அதிவர்ணாச்சிரமி.

பிராஹ்ம க்ஷத்திரியாதிவர்ணத்தை(சாதியை)யும் பிரஹ்மசரிய முதலிய ஆசிரமத்தையு(நிலையையு)ம் கடந்துள்ளவன் அதிவர்ணாச்சிரமி. சாதியும் ஆசிரமமும் ஸ்தூலதேகத்தின் கற்பனையாதலானும், ஜீவன்முத்தன் (அஞ்ஞானிகள் போன்று தேகாகாரமாகாது) அறிவாகாரமாயிருத்தலோடு அதற்குச் சாட்சியாக விளங்குதலானும் அவனுக்குச் சாதியும் ஆசிரமமு மின்றாயின.

## குணாதீதன்.

நிர்விகற்ப சமாதிவாயிலாகப் பிரகிருதியை யொழித்துச் சொரூபமாக விளங்குபவனிடத்துப் பிரகிருதியின் குணங்களான சத்துவாதிக ளிருத்தற்கு ஞாயமின்மையின் அவன் குணாதீதனாம். குணாதிதன் சத்வாதிகுணங்களுக் கப்பாற்பட்டவன். "நேத்திரங் கண்ட மிருதயங்களை ஸ்தானமாகவுடைய சாக்கிர சொப்பன சுழுத்தியாகிய அவஸ்தாத்திரயங்கட்கு விலட்சணனா (வேறா) யிருப்பதே குணத்திரயங்களைக் கடப்பதாம்" என்று நவநீதசாரம் நிருவாணப் பிரகரணத்

திற் கூறுகின்றது. இதுபற்றி விரிவாயறிய விரும்புவோர் பகவத்கீதை 14 - வது அத்தியாயத்திற் கண்டுகொள்க.

### பகவத் பக்தன்.

ஒன்றன்கண் பூச்சிய (பூசிக்கத்தக்க) புத்தியோடுண்டாகும் பிரீதி (அன்பு) பக்தியாம். இதனைப் பகவானி (கடவுளி) டத்து வைத்தவன் பகவத்பக்தனும். இது மனத்தினுற் செய்யும் பக்தி, வாக்கினுற்செய்யும் பக்தி, காயத்தினுற் செய்யும் பக்தி, இலௌகிகபக்தி, வைதிகபக்தி, ஆத்தியாத்மிக பக்தி யெனப் பலவகையாம். சிவேசுர பாவங்கழன்று பிரஹ்ம வடிவாய் நிலைத்துள்ள ஜீவன்முத்தன் சர்வபூதங்களிலும் ஆத்மாவின் (தனது) பகவத்பாவத்தையும் பகவத்வடிவ தன்னிடத்துச் சர்வபூதங்களையும் காண்டலே இங்குப் பகவத்பக்தியாம். பகவத்கீதை 6-வது அத்தியாயத்தில் "(பிரஹ்மாமுதல் ஸ்தம்பபரியந்தமுளள)சகலவஸ்துக்களிலும் சமமாய்ப்பிரஹ்மத்தைப் பார்க்கின்ற தியானயோகத்திலேயே மனதையுடைய யோகியானவன் தான் சகலவஸ்துக்களிலு மிருக்கிறதாகவும் தன்னிடத்திலே சகல வஸ்துக்களு மிருக்கின்றனவாகவும் பார்க்கிறான்" என்று கூறி யிருத்தலு மிங்கறியத்தக்கது.

### பிராமணன்.

ஞானயோகத்தால் பிரஹ்மத்தை யறிந்து அவ்வடிவாக நிலைத்தவன் பிராமணன் "ஞானியானவன் குடுமியுடன் க்ஷவரஞ்செய்துகொண்டு வெளிப்பூணூலை யெடுத்துவிடவேண்டும். நாசமற்றதாயும் சிரேஷ்டமாயு மிருக்கிற பிரஹ்மமெதுவோ அதனைச் சூத்திரமாக (பூணூலாக)த் தரித்துக் கொள்ளல் வேண்டும். சூசிப்பிக்கிற (குறித்துக்காட்டுகிற) தினுலே சூத்திரமென்று சொல்லுகின்றுர்கள். சூத்திர மென்பது பரம

பதம் (உத்தம ஸ்தானமாகிய பிரஹ்மம்). எவனால் அந்தச் சூத்திரமானது அறியப்படுகின்றதோ அவன் பிராமணன்" என்று நாரதபரிவிராஜகோப நிஷத்து மூன்றாவ துபதேசத்திற்கூறுவ திங்குக் கவனிக்கத்தக்கது.

## மோட்சம்.

சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியும் மோட்சத்தின் வடிவமாம். மாயையும் அதன் காரிய வடிவவுலகும் சர்வதுக்கமாம். பரமாநந்த வடிவாயிருப்பது பிரஹ்மமாம். மோட்சமானது தத்துவ விசாரஞ் செய்வதனால் உண்டாகின்றது. யான் யார்? பிரஹ்மமென்பது எத்தகையது? பிரபஞ்சமென்பது யாது? என்றிம்மூன்றுவஸ்துக்களையும் விசாரித்தலே யிங்குத் தத்துவ விசாரமாம். இம்மூன்று தத்துவங்களையும் சற்குரு முன்னிலையில் ஐயந்திரிபற விசாரித்து நானும்பிரஹ்மமும் சேதனவடிவம்; உலகம் ஜடவடிவம்; மாயோபாதியினால் நான் பிரஹ்மத்திற்கு வேறுபட்டவன் போல் தோன்றுகின்றேன்; உண்மையில் வேறுபட்டவனல்லன். பிரஹ்மத்திற்கு வேறாகாத நான் பரிபூரணமா யிருத்தலால் உலகம் சத்தாகவிராது என்னிடத்திற் கயிற்றின்கண் அரவுபோல் கற்பனையாயிருக்கிறது. கற்பனையாயிருக்கு முலகு அதிஷ்டானமான என்னைவிட்டு வேறு யிராமையால் நானேயுளன்; பிறிதொன்றென்பது காலத்திரயத்திலுமில்லை. சர்வம் மித்தை, சர்வம் பிரஹ்மம், சர்வம் நான் என்று திடப்பட வறிந்தவனுக்குத்தான் மோட்சமுண்டாமென்பது சித்தமாமென்க. சாதன சதுஷ்டய முடையார் யாவராயிருப்பினும் அவரியாவரும் இத்தத்துவவிசாரம் செய்வதற்குச் சுதந்தரமுடையோ ராவார். இத்தத்துவவிசாரம் சாதியையும் தேயத்தையும் ஒட்டி யிருத்தலில்லை. யாவரும் இந்தத் தத்துவத்தை விசாரம் பண்ணி மோட்சமடைய

கடவர்' என்றுகூறி யிருத்தலினால் எத்தேசத்தாரும் எச சாதியாரும் இதற்குரியவரா மென்பதுவெள்ளிடைமலைபோல் விளங்குமென்க. "இந்த ஞானந்தான் வருவதெப்படியெனி லிடைவிடா விசாரத்தால், வந்தடைந்திடும் விசாரந்தானே தெனின் மனுதியாஞ் சரீரத்தில், இந்தநானெவன் சிதசெது சடமெது விரண்டுமொன் றுக்கூடும், பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர்விசாரமதாகும்" என்றுகைவல்யமும், "விசாரிக காததினால் பந்தத்தையும் விசாரிக்கிறதினால் மோட்சத்தையு மடைகிறான். ஆகையினாலே எப்போதும் விசாரஞ் செயயத் தக்கதாம. அத்தியாரோபத்தி (ஒரு வஸ்துவில் பிறிதொரு வஸ்து தோன்றுவதி)னாலும் அபவாதத்தி (காரணத்திற் கன்னியமாயக் காரியமில்லையென்றதி) னாலும் சுவரூபததை நிச்சயிக்கக் கூடும். ஆகையால் ஜகம், ஜீவன், பரமாதமாக களைக் குறித்துச சதா விசாரிக்கவேண்டும். ஜீவசுவ ரூபம ஜகதஸ்வரூபமுந் தெரிந்தால் பிரத்தியக் (கூடஸ்தனுககு) அபேதமாகிய பிரஹ்மந்தான் மிஞ்சுகிறது" என்று பைஙக ளோபநிஷத்தும் கூறுவதின் கறியத்தக்கதாம். ஞானசாஸ் திரத்தை யேற்றுச் சற்குரு முன்னிலையில் ஆத்மா னாதம விசாரஞ்செய்து பிரஹ்மமாக மிஞ்சும் புருஷார்ததததைப பெறுதலே மனிதராய்ப் பிறந்தவரின் கடமையாம்.

ஓம் - சுபம்.

நாநாஜீவவாதக் கட்டளை

குறிப்புரையுடன்.

மஹோபாத்தியாய முற்றிற்று.

உ. வே. சாமிநாதையர்

நூல் நிலையம். குருவேதுணை.

## ரிபுகீதைத்திரட்டு

### குறிப்புரையுடன் (புதியபதிப்பு).

மகா இதிகாசங்களு ளொன்றாகிய சிவரகஸ்யத்தில் ஆறாவது அம்சத்திலுள்ள ரிபுகீதை வடமொழி வல்லார்க்கேயன்றித் தமிழருக் குபயோகமாகாதிருத்தலை நோக்கித் திருவிடைமருதூர்ப் பிட்சுசாஸ்திரிகளெனவழங்கும் உலகநாதசுவாமிகளவர்களால் 1924 பாடலாகத்தமிழில் மொழிபெயர்த்தருளப்பட்டது. அது தமிழ்மக்களியாவர்கரும் பெரிதும் உபயோகமாகும்படி விஷயப்பொருத்தம் விடாது 874 பாடலாகத்திரட்டப்பட்டு அவசியமான விடங்களிற் குறிப்புரையெழுதப்பட்டுள்ளது இது முமுட்சுக்க ளொவ்வொருவராலும் அத்தியாவசியகமாய் விரும்பத்தக்க தென்பது மிகுப்ரசித்தம்

காலிக்கோபைண்ட் விலை ரூபா 1.

## பாட்டியற் கோத்து

### (உரையுடன்).

இதில் வசசணந்திமாலை, சிதம்பரப்பாட்டியலின் பொருத்தவியல் மரபியல், நவநீதப்பாட்டியல், சம்பந்தப்பாட்டியல அடங்கியிருக்கின்றன. இது நூலின் முன்மொழி இலக்கணமும் பிரபந்த விலக்கணமும ஆராய்வார்க்குப் பெருங் கருவியாயிருப்பதாம். விலை அணா 6.



| | | | |
|---|---|---|---|
| திருவாசகம்-பாக்கெட்சைஸ் ... ... ... | 0 | 10 | 0 |
| வேதாந்தசாரம் ... ... ... ... | 0 | 10 | 0 |
| நவநீதசாரம் ... ... ... ... ... | 0 | 8 | 0 |
| வாக்கியசுதை ... ... ... ... | 0 | 2 | 0 |
| அத்துவிதவுண்மை ... ... ... ... | 0 | 1 | 0 |
| தாயுமானவர் பாடல் ... ... ... | 0 | 8 | 0 |
| தோத்திரக்கொத்து ... ... ... ... | 0 | 1 | 0 |
| வைசியகுல விளக்கம் ... ... ... | 0 | 4 | 0 |
| சமயவாதநிவாரண சங்கிரகம் .. ... ... | 0 | 1 | 0 |
| வேதாந்தப் பிரதீபம் ... ... ... ... | 0 | 12 | 0 |

## தர்க்கபரிபாஷை (விரிவான குறிப்புரையுடன்).

**விலை ரூபாய் ஒன்று.**

சர்வ வித்தைக்குந் தீபமாயும், சகல கர்மங்கட்கு முபாய மாயும், சகல தர்மங்கட்கு மாசிரயமாயுமுள்ள தர்க்கசாஸ்திரம் சம்ஸ்கிருதத்தில் பிரபலமா யிருப்பதுபோல் தமிழிலில்லாமை யினாலாகுங் குறை நிவர்த்திக்கும்பொருட்டுத் துறைமங்கலம்-சிவப்பிரகாசசுவாமிகளால் மொழிபெயர்க்கப்பட்ட தர்க்க பரிபாஷை சட்தர்சனங்களுளொன்றாகிய நியாயசாஸ்திரத்தை யனுசரித்துப் பிரமாணமுதல நிக்கிரகஸ்தானமீறாகிய சோடச (பதினாறு) பதார்த்தங்களைச் சங்கிரகமாக நிரூபிப்பதா யிருத்தலின், அது பிரஹ்மஸ்ரீ. விஷ்ணுபுரம் - இராமசந்திர சாஸ்திரி யாரவர்கள் முன்னிலையிற் பரிசோதித்துச் செப்பஞ் செய்யப் பட்டு தர்க்காப்பியாசஞ் செய்யும் யாவருக்கும் பிரமாணமுத லியவற்றின் யதார்த்தஞானம் எளிதி லுண்டாகுமாறு சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் கோ-வடிவேலுசெட்டியா ரவர்களால் அவசியம் வேண்டு மிடங்களில் விரிவாகக் குறிப்புரையெழுதப்பட்டுள்ளது



## திருக்குறள் பரிமேலழகருரை,

## தெளிபொருள் விளக்கம், கருத்துரை, குறிப்புரை.

**விலை ரூபாய் 6**

இப்புஸ்தகம் டிமை 8 பக்கங்கொண்ட அளவில் 1300 பக்கங்களுக்கு மேற்பட்டது; 2 வால்யூமாகக் கலிக்கோ பைண்ட் செய்யப்பட்டுள்ளது. உபாத்தியாயர் சகாயமில்லாமலே பரி மேலழகருரையின் அருமை பெருமைகளை யெல்லாம் இதனால் நன்றாகத் தெரிந்துகொள்ளலாம். தெளிபொருள் விளக்கம் கருத்துரை, குறிப்புரைகள் பரிமேலழகருரைக்கிணங்கப் புதி தாய் எழுதப்பட்ட முதற் பதிப்பு.



| | | | |
|---|---|---|---|
| விவேகசூடாமணி-பாக்கெட்சைஸ், சுத்தப்பிரதி | 0 | 8 | 0 |
| அறிவானந்தசித்தியார் ... ... ... | 0 | 4 | 0 |